# கபீர்தாசரும் தாயுமானாரும்

●

பி. ஸ்ரீ.

●

ஸ்டார் பிரசுரம்
72, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.
போன் : 844740

# பதிப்புரை

தமிழ்ப் பேரறிஞர் திரு. பி. ஸ்ரீ. அவர்கள் எழுதிய பாரதியும்—தாகூரும், இராமகிருஷ்ணரும் இராமலிங்கரும் காந்தியும், விநோபாபாவும் வள்ளுவரும் சாக்ரட்டீசும், ஆண்டாளும் மீராவும் போன்ற அருமையான ஒப்புநோக்கு நூல்களைத் தொடர்ந்து இந்நூலையும் வெளியிடுவதில் மிகவும் பெருமை அடைகின்றோம்.

திரு. பி. ஸ்ரீ. அவர்கள் சுமார் நாற்பதாண்டுகளுக்கு மேலாகத் தமிழோடு தம்மை ஈடுபடுத்தி, சிறந்த தொண்டினைத் தமிழ்த் தாய்க்குச் செய்து வருகிறார். இவர் எழுதிய நூல்கள் கணக்கில் அடங்கா. இவரை அறியாதார் தமிழ் கூறும் நல்லுலகத்தில் எவரும் இரார்.

இவரது நூல்கள் எளிமையும், இனிமையும் கலந்து கற்போரது நெஞ்சத்தைக் கவரும் தன்மையன என்பதோடு அறிவுப் பசிக்கும் பெருவிருந்தாக அமையும்.

இந்நூலில் இரு பெரும் அநுபூதிமான்களாகிய கபீர் தாசரையும் தாயுமானவர் அடிகளையும் மிக அழகிய முறையில் ஒப்புநோக்கி எழுதியுள்ளார்.

ஏற்கனவே வெளிவந்த எமது மேற்கண்ட நூல்களை வாங்கிப் பயன்பெற்ற அன்பர்கள் இந்நூலிற்கும் நல்வரவேற்பு அளிப்பர் என நம்புகிறோம். இதைத் தொடர்ந்து இவரது மேலும் பல ஒப்புநோக்கு நூல்களை வெளியிட உள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்டார் பிரசுரம்

# பொருளடக்கம்

# 1. சக்திக் களஞ்சியம்

ஒரு சமயம் தாயுமான சுவாமிகளுக்கு மிகவும் விலை உயர்ந்த சால்வையைப் பரிசாக அரசன் கொடுத்தான். அதை அவர் வீட்டுக்கு எடுத்துப் போகையில் வழியிலே ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த ஏழைப் பெண் ஒருத்தி குளிரால் நடுங்கிக் கொண்டிருந்தாள். 'என்னைக் காட்டிலும் இவளுக்குத்தான் இது அதிகமாகப் பயன்படும்' என்று சால்வையை அவர் அப் பெண்ணுக்கே கொடுத்து விட்டார்.

இதை அறிந்த அரசன் சினந்து சீறினான். 'அந்தப் போர்வையை யாருக்குக் கொடுத்தாய்?' என்று அதட்டினான். 'அகிலாண்டேசுவரியாகிய என் தாய்க்குக் கொடுத்தேன்' என்றார் அமைதியாக இந்தப் பக்தமணி.

இன்றைய நாகரிக வாழ்வைச் சிக்கலான பிரச்னைகள் எதிர் நோக்கியுள்ளன. அறிவின் அடிப்படையில் இவற்றைத் தீர்த்துவைக்க முயல்கிறார்கள் அறிஞர்கள். அறத்தின் அடிப்படையில்தான் இப்பிரச்னைகளுக்குத் தீர்வுகாண முடியும் என்று ஜைன பௌத்த சமயிகள் கருதுகிறார்கள். தருமம் தவறாமல் வாழ்வதற்கு ஆழ்ந்த தத்துவ அடிப்படையில் அத்தருமத்தை நிற்கச் செய்ய வேண்டும் என்பது வேதநெறியான இந்து மதத்தின் கொள்கை. 'உலகமெல்லாம் ஒன்றே, உயிர்குலம் ஒன்றே' என்ற உணர்வுதான் அத்தகைய உயிர்நிலைத் தத்துவமாகும்.

### ஒன்றாகக் காண்பதே காட்சி

இதை மறந்து பொருளாதார முறையிலும் புலனுகர்ச்சி வழிகளிலுமே இச்சைகளைப் பூர்த்தி செய்

வித்து அதனால் நித்திய சுகத்தையோ, நிரந்தர அமைதி யையோ அடையக் கூடும் என்று நம்புவோர் நெய் சொரிந்து நெருப்பை அவிக்க முயல்வோரே ஆவர். அறத்தைப்போல் பொருளும் இன்பமும் மனிதனுக்கு அவசியம்தான்; இவ்விரண்டிலும் நிறைவு காண வேண்டும் என்பது நியாயமே. ஆனால், இவற்றில் நிறைவு கண்ட பின்பும் ஏதோ ஒரு குறைவு மனிதன் தனக்கு இருப்பதாகவே உணர்வான். அந்தக் குறையை யும் நிறை செய்து மனிதனுக்கு ஆற்றலும், ஆதரவும், அமைதியும் அளிப்பதுதான் மதம் என்று ஒரு சொற் பொழிவினிடையே ஸ்ரீ ஜய சாமராஜ உடையார் என்ற அறிஞர் கூறியுள்ளார்.

மனிதனின் ஆத்மாவுக்கும்,—ஏன், மனிதனாகிய ஆத்மாவுக்கும்—மகா சக்தியான பரமாத்மாவுக்கும் இடையே உள்ள உறவைக் குறிப்பது மதம்.

இந்து மதத்தைச் சேர்ந்தவர்கள் பல தெய்வங்களை வழிபடுகிறார்களே, இதில் என்ன ஒருமையோ, ஒற்று மையோ இருக்கமுடியும்? எனக் கேட்கலாம். அந்தத் தெய்வங்களெல்லாம் பரம்பொருளின் வெவ்வேறு தோற்றங்களே என்பதை இந்துக்கள் மறப்பதில்லை. இந்து மதத்துக்குள்ளே பல பிரிவினைகள் இருந்த போதிலும் அவற்றை ஒன்றாகக் காணும் தத்துவமும் அதிலேயே அடங்கியிருக்கிறது. இதுதான் ஹிந்து மதத் தினர் மற்ற எந்த மதத்தினரையும்விட அதிக அளவில் விசால மனப்பான்மையும், சகிப்புத்தன்மையும் உடைய வர்களாக இருப்பதற்குக் காரணம்.

இந்த இதயப் பான்மையை 'இதயத்தின் விருந் தோம்பும் பண்பு' எனக் கூறலாம். விருந்தாக வந்தவர் களை—அவர்கள் அன்னியராயினும், பகைவர்களே யாயினும் மனமுவந்து, முகமலர்ந்து வரவேற்க வேண்டு மல்லவா? அவர்களுடைய உணர்ச்சிகளையும் மதித்து

நடக்கிறோம். அப்படியே பல்வகை கருத்துக்களையும் அன்புடனும், அனுதாபத்துடனும், பணிவுடனும் வர வேற்றுப் பரிசீலிக்க வேண்டும் என்பது இந்து மதத்தின் பரந்த நோக்கங்களில் ஒன்று.

நாற்பாற்குலம் என்ற வருணாசிரம தருமம் 'மக்களின் நானாவிதத் திறன்களையும், அதிகார பேதங் களையும் ஊட்டிச் சமுதாயத்தை ஒழுங்குபடுத்த முயலும் ஒரு முறைதான்' என்கிறார் அறிஞர் ஸ்ரீஜயசாமராஜ உடையார். இதில் ஆத்ம விசாரம் செய்பவனுக்கு முதலிடம் அளித்திருப்பதாலும், ஆத்ம விசாரம் செய்யும் வாழ்வே தலை சிறந்தது என்று கருதப்படுவதாலும், உண்மையான வருணாசிரம தருமக் கோட்பாட்டில் சாதிக் கொடுமைகளுக்கு இடமில்லை என்கிறார் இவர்.

பக்திக்கொள்கைகளிலும் சாதி உணர்விற்கு இட மில்லை. தொண்டக்குலம் நாற்பாற் குலத்திற்கும் மேலான ஒருவகை, 'ராஜகுல'மாக மதிக்கப்படுகிறது. சாமானியர்கள் குலத்தில் பிறக்கிறார்கள் என்றும், பக்தர் களுக்குக் குலம் பிறந்து விடுகிறதுஎன்றும், கூறுவதுண்டு. தொண்டக் குலத்தினர் பண்டைக் குலத்தைத் தவிர்த் திருப்பர் என்றும் பெரியாழ்வார் கூறுவர்.

## அனுபூதிக்கலையும்-தொண்டக் குலமும்

இத்தொண்டக் குலத்தினரில் சிறந்தவர்கள் எல்லாம் அநுபூதி மான்கள்; பல்வகைப் பக்திச் சுவைகளையும் அநுபவங்களையு முடையவர்கள். மனிதனுக்குள்ளே ஒரு மகத்தான சக்திக் களஞ்சியம் இருக்கிறது. அதை நிரப்பு வது தான் நமது மதத்தின் நோக்கம் என்பதையும் நினை வூட்டுகிறார் ஸ்ரீஜயசாமராஜ உடையார். இந்தக் களஞ் சியத்திலிருந்து ஆற்றல் நிறைந்த அமைதி பெற்று உலகத் தொண்டாற்றுவதையே உண்மையான தொண்டன் குறிக்கோள் ஆகக் கொள்ளுகிறான். உள்ளத்திற்குள்ளே

நிரப்பி நிற்கும் சக்தி உண்மையில் ஆண்டவனேதான் என்பது தொண்டன் உணர்ந்திருப்பதுதானே. ஆண்டவனே அகத்திலும் புறத்திலும் இருக்கிறான்.

'ஆண்டவன் எங்கேயோ மேக மண்டலத்திற்கு அப்பாலுள்ள பரமண்டலத்திலே ஒதுங்கி வாழ்கிறான் என்பதில்லை. கடினமான நிலத்தைப் பிளந்து உழுது பயிரிடும் உழவன் பக்கத்திலும், கற்களை உடைத்துப் பாதை அமைக்கிறவன் பக்கத்திலும் இருப்பான் அவன். அவர்களோடு வெயிலிலும், மழையிலும் தன் பொன்னாடை புழுதிபடியச் சேறுபடியக் கலந்திருப்பான்' என்கிறார் கவியரசர் ரவீந்திரர் தம் கீதாஞ்சலியிலே.

இத்தகைய ஆண்டவனை நோக்கி, 'பரம ஏழைகளும், மிக மிகத் தாழ்ந்தவர்களும், பிறரால் கைவிடப் பட்டவர்களும் இருக்கும் இடமன்றோ உன் திருவடி நிலை!' என்றும் கூறுகிறார் கவியரசர்.

இதே கருத்தை அழகிய மணவாள தாசர் என்ற பிள்ளைப் பெருமாளையங்கார் வாக்கிலும் காண்கிறோம்.

அற்றவர்சேர் திருவரங்கப் பெருமாள்—அதாவது வேறு கதியில்லாதவர்கள் யாவரும் வந்து அடையக்கூடிய அரங்கநாதன் என்கிறார்.

கதி அற்றவர்களும் ஆண்டவன் என்ற சக்திக் களஞ்சியத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஒருமையுள்ளத்துடன் ஆண்டவனுக்கு ஆளாக விரும்புவதே போதும்.

'ஒன்றே நினைந்திருந்தேன்;
ஒன்றே துணிந் தொழிந்தேன்
ஒன்றே என் உள்ளத்தின்
உள்ளடைத்தேன்.'

என்று அனுபவ ஞானியான காரைக்கால் அம்மையார் கூறி அந்த ஒன்றே அவனுக்கு 'ஆளாம் அது' என்று முழக்குகிறார்.

## இரு பெருந் தொண்டர்கள்

ஆண்டவனுக்கு ஆளாகித் தங்கள் இதயத்தை ஒரு சக்திக்களஞ்சியம் ஆக்கிக்கொண்ட தொண்டர்களில்தாயுமானவரையும், கபீர்தாசரையும் இங்கே காண முயல்வோம். இவர்கள் இருவரும் இந்திய அநுபூதிக் கலைஞர்களான பக்தர்களின்வரலாற்றிலேதக்க இடம் பெற்றிருப்பவர்கள். கபீர்தாசர் முகம்மதியப் பெற்றோர்களுக்குப் பிறந்தவர். தாயுமானவ சுவாமிகள் சைவ வேளாளர் வகுப்பில் உதித்தவர். எனினும் சாராம்சத்தில் இந்த இருவரது பக்தி அனுபவங்களும் ஒத்திருக்கின்றன.

தாயுமானவர் தமிழ்நாட்டில் வேதாரணியம் என்று பெயர் பெற்றிருக்கும் சிவத் தலத்தில் பிறந்தார். கபீர்தாசர் காசியிலோ அதற்கு அருகிலோ பிறந்தார். காசியும் விசுவநாதர் என்ற சிவபெருமானுக்குரிய தலம்தான். வேதாரணியத்தைக் காட்டிலும் அகில இந்தியப் புகழ் பெற்றிருப்பது காசி; ஏன் உலகப் புகழும் பெற்றிருக்கிறது. வேதாரணியம் சோழநாட்டில் உள்ளது. மறைக்காடு என்று பொருள்படும் பெயரோடு தமிழறிஞர்களால் போற்றப்படுவது. தென்னகத்தின் ஒரு மூலையிலுள்ள வேதாரணியம் எங்கே? காசி எங்கே? எனினும் அனுபூதிக் கலைஞர்களான இந்த இரண்டு பெரியவர்களின் அனுபவங்களும் காசியையும், வேதாரணியத்தையும், உணர்ச்சியுலகில்-அனுபூதியுலகில் இணைத்துள்ளன எனலாம்.

தாயுமானவர் சிவ பக்தர்; கபீரையோ இந்து சமய பக்தர் என்றோ, முஸ்லிம் பக்தர் என்றோ திட்டமாக வரையறுத்துக் கூற முடியாது. கபீர்தாசர் தாயுமானவருக்கும் முற்பட்டவர்; கி. பி. 15-ம் நூற்றாண்டைச் சார்ந்தவர். தாயுமானவர் கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். ஆனால், அன்பு நெறியாகிய பக்தி நெறி தேச கால தூரத்தைச் சமீபமாக்கிவிடுகிறது.

கபீர்தாசர் ஓர் இந்து குருவின் முஸ்லிம் சீடர். தாயுமானவர் திருமூலர் என்ற சிவநேசரின் வழி வழி வந்த ஒரு குருவால் ஆட்கொள்ளப்பட்டவர். தம் வாழ்க்கையின் முற்பகுதியிலேயே குருவருள் தேடி வந்தது. ஏறத்தாழ வாழ்க்கையின் இடைக்காலத்திலே இத்தகைய வேற்றுமைகளால், இவர்கள் இருவருக்கும் குருவருளால் கிடைத்த அருட்செல்வம் ஒன்றே என்பதை மறப்பதற்கில்லை.

கபீர் குருவருள் பெற்ற செய்தி அதிசயமானது. இராமானந்தர் என்று பேரும், புகழும் பெற்றிருந்த இந்து சந்நியாசியின் சீடர்களில் ஒருவர் கபீர்தாசர். இராமானந்தர் தாயுமானவரின் தென்னகத்தைச் சார்ந்தவர்; தெற்கே ஸ்ரீவைஷ்ணவத்தை நிலைநிறுத்தி, இந்து வைதிக மதத்தைக் கி. பி. 12-ஆம் நூற்றாண்டில் சீர்திருத்த முயன்ற இராமானுஜரின் கொள்கைகளை ஒருவாறு பின்பற்றி இராமானந்தர் வட இந்தியாவிலே சமயப் பிரசாரம் செய்து வந்தார். இராமானுஜர் தோற்றுவித்த சமய மறுமலர்ச்சி சங்கரர் காலத்திற்குப் பின் அறிவையும், தர்க்க வாதங்களையுமே ஆதாரமாகக்கொண்டு வளர்ந்திருந்த அத்வைத மதத்தின் கண்டனமாகத்தொடங்கியது தான். அது பாகவதர்களின் பக்தி மதத்துடன் இணைந்து மலர்ந்த போதிலும், அதன் ஒரு பகுதி அத்வைத மறுப்பாகவே இருந்தது. பிறகு அது அன்பு நெறியாகக் கனியலாயிற்று. இந்த அன்பு நெறியைத் தான் இராமானந்தர் தெற்கேயிருந்து வடக்கே கொண்டு போனார். கபீருடனும் பங்கிட்டுக் கொண்டார்.

தொண்டர்களின் இந்த அன்பு நெறியை வைதிகச் சடங்கு மதங்களாலும் தத்துவக் கொள்கைகளாலும் அழிக்க முடியாது; அசைக்கவும் முடியாது என்பதற்குச்

சைவ வைணவங்களான பக்தி மதங்களின் வளர்ச்சியே சான்றாகும். இந்தப் பக்தி, வேத நெறியோடு கூடிய இந்து சமயத்திற்கு உரியதாயினும், இது பெரும்பாலும் தென்னகமாகிய தமிழகத்திலே அரும்பி மலர்ந்து சிறப்பாகக் கனிந்ததுதான். பகவத்கீதையில் காணப்படுகிறது என்பது உண்மைதான்; ஆனால் பாகவத புராணம்தான் தமிழகத்தில் வளர்ந்த கண்ணன் கதைகள் அடங்கிய ஸ்ரீ பாகவதம்தான்—பக்திக்கு ஒரு வளர்ப்புப் பண்ணையாயிற்று. இந்தப் பக்திக் கொள்கையில் இராமானந்தர் காலத்திலே ஜலாலுதீன்ரூமி போன்ற பாரசீக அனுபூதிக் கலைஞர்களின் கொள்கைகளும் இரண்டறக் கலந்தன. இச்சங்கமத்தின் ஒரு வடிவம் கபீர்தாசர். 200 ஆண்டுகளுக்குப் பின் தமிழகத்திலே தோன்றிய சைவ வடிவம் தாயுமானவர்.

தாயுமானவர் பாடல்களைப் போலவே குணங்குடி மஸ்தான் சாகிப் என்ற முஸ்லிம் தமிழ்த் தொண்டரின் பாடல்களும் அமைந்திருப்பதைக் காண்கிறோம். எனினும் தாயுமானவரது பக்தி நெறியிலே பாரசீக முஸ்லிம் அனுபூதிமான்களின் ஆதிக்கம் காணப்படுகிறது என்பது அதிசயமாகத் தோன்றிய போதிலும் உண்மைதான் என்பதை நாம் உள்ளத்தில் பதிய வைத்துக் கொள்ள வேண்டும். ஏன்? இராமானுஜரும் அவருக்குப் பின் வந்த பிள்ளை லோகாசாரியர் போன்றவர்களும் வளர்த்துவிட்ட பக்தி மதத்திலேயே முஸ்லிம் அனுபூதிமான்களின் சாயை படிந்திருப்பதைக் காண்கிறோம். இத்தகைய வைணவத்தைத் தான் இராமானந்தர் வடக்கே கொண்டு போய் கபீர் முதலானவர்களோடு பகிர்ந்து கொண்டு, கருத்து—வாணிபம் செய்யலானார்.

கிறிஸ்து சமயத்தின் பக்திச் சாயைகூட ஸ்ரீவைஷ்ணவத்தில் படிந்திருப்பது போலக் காண்கிறது. எப்படிப் பார்த்தாலும் பக்திமதம் ஒரு கலப்பு மதம்தான்; எனவே சாதிமதப் பாகுபாடுகள் இன்றி அனைவருக்கும் உரியது.

இக்கலப்பு மதத்தை 'அல்லாவுக்கும் - இராமனுக்கும் குழந்தை' என்று தம்மைச் சொல்லிக் கொண்ட கபீர் தாசர் தழுவிக் கொண்டார் என்பது இந்திய சமய சரித்திரத்தில் ஒரு முக்கியமானசெய்தி; அதிசயமான நிகழ்ச்சி. ஏறத்தாழ இதைப் போன்ற ஒரு நிலைமையைக் குருவருள் தாயுமானவருக்கும் கூட்டி வைத்தது எனலாம்.

வடக்கே சுமார் பத்து லட்சம் இந்துக்கள் 'கபீர் பந்த்' என்றகபீர்தாசரின் இயக்கத்தைஇன்றும்பின்பற்றி வருகிறார்கள். தாயுமானவரின் செல்வாக்கோ அத்தகைய இயக்கமொன்றையும் சைவ சமயத்திற்குள்ளே தோற்றுவிக்கவில்லை. கபீர் தாசர் இந்து முஸ்லிம் சிந்தனைகளை ஒன்றுபடுத்த முயன்று ஓரளவு வெற்றி பெற்றது போல், தாயுமானவரும் வேதாந்த சித்தாந்தக் கோட்பாடுகளை ஒன்றுபடுத்த முயன்று கணிசமான அளவிற்கு வெற்றியும் பெற்றிருக்கிறார்.

'வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே.'

என்று ஒரு கூட்டத்தைக் குறிப்பிடுகிறார் தாயுமானவரும். ஆனால் சித்தர் கணத்தைக் 'கபீர் பந்த்' (கபீர் இயக்கத்தைச் சார்ந்தவர்கள்) என்று ஒரு கூட்டத்தை வடநாட்டில் சுட்டிக் காட்டுவது போல், தமிழகத்தில் சுட்டிக் காட்ட முடியாது.

உண்மையில், தாயுமானவரையோ, கபீரையோ ஓர் இயக்கத்தை உருவாக்கியவர் என விளம்பரப்படுத்துவதைக் காட்டிலும் குறுக்குச் சுவர்களில்லாத அனுபூதி அரண்மனைக்குரிய கலைஞர்கள் எனச் சுட்டிக்காட்டுவதே பொருத்தமாகும். சமயப் பூசல்களுக்கோ, வீண் வாதங்களுக்கோ இருவர்கொள்கைகளிலும் இடமில்லை. இவர்களது அதிசயமான பாடல்கள் சக்திக் களஞ்சியமாக நமக்குக் கிடைத்திருக்கின்றன. இவற்றில் அனுபூதி உணர்வின் உயர்வையும் பரப்பையும் ஆழத்தையும்

காண்கிறோம்; சிந்தனையின் சிகரங்களையும் காண்கிறோம். அன்பின் பேராழத்தையும் காண்கிறோம்.

கபீர்தாசரை வைஷ்ணவர் என்பதா, வேதாந்தி என்பதா? சூபி (Sufi) பக்தர் என்பதா? இந்து பக்தர் என்பதா? இத்தகைய கூடுகளில் இவரை அடைத்து வைக்க முடியாது. அப்படியே தாயுமானவரையும் வேதாந்தி என்பதா, சித்தாந்தி என்பதா, சைவர் என்பதா, சித்தர் என்பதா என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. பெயரைப் பார்த்தால் தாயுமானவர் சைவர். ஆம், சிவ பெருமானுக்கும் இப்பெயர் உண்டு. திருச்சி மலைக்கோட்டையில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானைத் தாயுமானவர் என்றே அழைக்கிறார்கள். கபீர் என்ற பெயரோ, இவர் முஸ்லிம் மரபினர் என்பதை முடிந்த முடிவாக வற்புறுத்துகிறது.

காசி வாசியான ஒரு முஸ்லிம் நெசவாளியின் புதல்வர் அல்லது தத்துப் புதல்வர் கபீர். தாயுமானவர் வேளாள வகுப்பினர்-உழுவித்து உண்ணும் வகுப்பினர்தாம். இவ் வகுப்பினர் தமிழ்க் கல்வியில் ஈடுபட்டவர்கள். முஸ்லிம் நெசவாளியையோ கல்விமான் என்று கருதுவதற்கில்லை. ஆனால் பக்திநெறி கற்றவர், கல்லாதவர் என்ற இரு சாராருக்கும் பொதுவாக உரியதுதானே. கல்விச் செருக்கு பக்திக்கு விரோதியும்கூட.

## குருவும்-சக்திக் களஞ்சியமும்

இராமானந்தரின் உபதேசங்களைக் கேட்க இந்துக்களும் சூபி பக்தர்களும் வந்து கூடுவார்கள். அப்போது இராமானந்தரின் புகழ் உச்ச நிலையில் இருந்தது. கபீர் சிறுவராக இருந்தார்; ஆனால் பிஞ்சிலே பழுத்த ஞானப் பழம். இராமானந்தரை விதி கூட்டுவித்த குருவாகச் சிறுவர் கபீர் முன் கூட்டியே கண்டு கொண்டார். ஆனால் இந்து குரு முஸ்லிம் சீடருக்குக் குருவாவது எப்படி?

கபீர் ஒரு தந்திரம் செய்தார். கங்கையின் நீர்த் துறைப்படிகளில் ஒளிந்திருந்தார். அந்தவழியாகஇராமா

னந்தர் நீராட வருவது வழக்கம் என்பது கபீருக்குத் தெரி யும். படித்துறையில் இறங்கி வரும்போது கபீரின் உடம் பில் இராமானந்தர் கால் பட்டுவிட்டது. எதிர்பாராத அந்த நிலையில் இராமானந்தர் ஆச்சரியத்தோடு, 'ராம், ராம்' என்றார். அந்த இராமநாமத்தால் ஆண்டவனை வழிபட்டவர் அவர். கபீரோ இராமானந்தர் வாயி லிருந்து தமக்கு உபதேச மந்திரம் கிடைத்து விட்டதாகக் குதூகலமடைந்தார். ராமானந்தரும் அப்பால் கபீரைச் சீடராக ஒப்புக் கொண்டார் என்று ஊகிக்கலாம். இதற்குக் கபீர்தாஸர் பாடல்களில் அகச்சான்று உண்டு.

தாயுமானவரின் குருதரிசனம் குறித்தும் இங்கேகுறிப் பிடுவது நலமாகும். திருமந்திரம் என்ற நூலை உபகரித் தவர் திருமூல நாயனார் என்பதைப் பலரும் அறிவர். இம்மரபில் வந்த சித்தர்களில் ஒருவர் மௌனகுரு சுவாமி கள். இவர் திருக்கயிலாய பரம்பரையைச் சார்ந்த மெய் கண்டார் மரபில் வந்த ஒருவரிடம் ஞானோபதேசம் பெற்றார். இவர் திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளி யுள்ள தாயுமானேசுவரர் என்ற சிவபெருமானைத் தரிசிக்க அங்கு சென்றார். அவரைத் தற்செயலாகக் கண்ட தாயுமானவர் உடனே மனம் உருகி அந்த அருள் நோக்கிற்கு வசப்பட்டு அடியற்ற மரம்போல் அவர் அடி களில் விழுந்து பேறு பெற்றார்.

### அக வளர்ச்சி

குரு தரிசனத்திற்குப்பின் கபீர்தாஸரும் தாயுமான வரும் சாதன ஏணியில் படிப்படியாக ஏறிப் பேறுபெற்ற விவரங்களை நாம் அறிந்து கொள்ள இயலவில்லை; ரோஜா மொட்டு மலர்வதுபோல் இவர்களது மதிநலம் வளர்ச்சிபெற்ற விதத்தையும் நாம் அறிந்துகொள்வதற் கில்லை. இருவரும் குருவருளாலும் குருவின் உபதேசங் களாலும் பெரும்பேறு பெற்றார்கள் என்பதையே நாம்

அறிவோம். தாயுமானவர் துறவியாகி விட்டார்; ஆனால் கபீர்தாசர் அத்தகைய துறவு முறைகளை மேற் கொள்ளவில்லை என்பதும் நமக்குத் தெரியும்.

இருவர் ஆன்ம வளர்ச்சியும் உள்ளுக்குள்ளே உள் ளொளியால் நிகழ்ந்ததுதான்; அவ்வளர்ச்சி அனுபூதிக் கலையுருவில் மலர்ந்து கவிதைக்குரிய இசையாகவும் சொற்கலையாகவும் கனிந்தது என்பதற்கு இந்த இருவர் பாடல்களும் சான்றுகள். கபீர்தாசர் தேர்ந்த இசைக் கலைஞராகவும், கவிஞராகவும் ஒருங்கே வளர்ந்தார் என்பது பிரசித்தமான செய்தி. தாயுமானவரது பாடல் களையும், கண்ணிகளையும் உற்று நோக்கும்போது, இவருக்கும் இசைப்புலமையும், கவித்திறனும் ஒருங்கே வாய்த்திருந்தன என்ற ஊகம் பொருந்தும் என்றே தோன்றுகிறது.

## பக்தியும்-தொழிலும்-சம்பிரதாயமும்

தாயுமானவருக்குப் புலமை அதிகம் என்பதற்கும் இவர் பாடல்கள் சான்று தருகின்றன. நெசவுத் தொழில் கபீருக்குப் பிழைக்கும் வழியாக இருந்தது. தாயுமான வரோ அரசவை புகுந்து உயர்ந்த உத்தியோகம் பார்த் தவர்; துறவு பூண்டதும் தொழிலே புரியாமல் சும்மா இருந்து பரசுகம் கண்டவர். உள்ளத்தைக் கடவுளுக்கும். உடம்பைத் தொழிலுக்கும் உரிமையாக்கி ஞானத்தில் வளர்ந்த கபீரைப் போன்றவர் அல்லர் தாயுமானவர்.

பொதுவாகக் கைகளால் வேலை செய்வது இதயத் திலே தியானம் தொடர்வதற்கு இடையூறு என்று கருது வோருண்டு. கபீர்தாசருக்கோ நெசவுத் தொழில் திய னத்திற்கு இடையூறாகாமல் அதற்கு ஒரு சாதனமும் ஆயிற்று என்பர். நம் தமிழகத் தொண்டர்களில் திருமிழி சையாழ்வார் கூடை முடைந்து கொண்டே தியானத்தில் ஈடுபட்டிருந்தார் என்பதற்கு அவர் பிரபந்தத்தில் அகச் சான்று கிடைக்கிறது. ஆனால் நம் தொண்டர்களில் பெரும்பாலார் இவ்விஷயத்தில் கபீரைக் காட்டிலும் தாயுமானவரைப் பின்பற்றியவர்களே ஆவர்.

கோரமான தவங்களில் நம்பிக்கை இல்லாதவர் கபீர் தாசர்; அத்தகைய தவங்களுக்குத் தாயுமானவரின் அன்பு நெறியும் இடம் கொடுத்திருக்க முடியாது. எனினும் இவர் பிற்காலத்தில் துறவியாகவே வாழ்ந் தார். கடுந் துறவியாகவும்கூடக் கபீர்தாசர் உள்ளத் துறவே உண்மைத் துறவு என்று கருதியதுபோல் இல்லறத்தை நல்லறமாகக் கொண்டு தொழில்புரிந்து வாழ்ந்தார். இந்த வாழ்க்கையில் பொதுமக்களைப் புரிந்து கொண்ட இதயத்திலிருந்து புறப்படுகின்றன கபீர்தாசரின் பக்திநெறிக் கீதங்கள். தாயுமானவரின் பாடல்களோ இந்த அளவிற்குப் பொது மக்களின் வாழ்க் கையோடு கலந்து உறவாடவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். எனினும் இவர் பாடல்களும் மக்கள் இலக்கிய மாக மதிக்கத்தக்க அபூர்வ எளிமை வாய்ந்த பழகு தமிழில் பாடப் பெற்றவைதாம்.

கபீர்தாசர் தாடிச் சாமியார்களையும், சடைச் சாமி யார்களையும் பரிகசிக்கிறார். அன்பும், மகிழ்வும், அழகும் ததும்புகிற வாழ்க்கையிலிருந்து உய்யும் நெறிநாடி ஓட வேண்டிய அவசியம் கிடையாது என்பது கபீர்தாசரின் சித்தாந்தம். ஆன்மநேய உணர்ச்சிகளும் ஒருமைப் பாட்டு நினைவுகளும் நடம்புரிய வாழ்க்கையாகிய அரங்கமேடை இடம் கொடுக்கிறது என்பது இவர் கருத்து. இக்கருத்துக்களை இவ்வளவு வெளிச்சமாக, வெளிப்படையாக நாம் தாயுமானவர் பாடல்களில் காண்பதற்கில்லை.

கபீர் சம்பிரதாய மதங்களின் முதல்தர விரோதி என்பதும் வெளிப்படை. சடங்கு மதத்தைத் தாயுமான வரும் ஒப்புக்கொள்ளவில்லை. பண்டிதர்களின் வாதங் களையும் விதண்டாவாதங்களையும் தாயுமானவரும் பரிகசித்திருக்கிறார். கடவுள், "நன்மையால் மிக்க' நான்மறையாளர்களைக் காட்டிலும் ஏழைகளான 'இழி குலத்தவர்களுக்கு எளியவர்' என்பது, கபீர்தாசர் வாக் கிலே வெளிப்படையாகவும், தாயுமானவர் வாக்கிலே இலைமறை காய் போலவும் புலனாகிறது எனலாம்.

பக்தி மதத்தின் புறச்சின்னங்களான கோயிலையும் மசூதியையும், மூர்த்தியையும், தீர்த்தத்தையும், சாத்திரங் களையும், குருமார்களையும் கபீரின் தெளிந்த உள்ளம் அறவே இகழ்ந்து ஒதுக்கி விடுகிறது. தாயுமானவரும் இவைகளுக்கு உண்மையின் உயர் பதத்தைக் கொடுத்து விடவில்லை; உண்மையின் பிரதிநிதிகளாக இவற்றை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் இவற்றை ஆத்மாவுக்கும் அதன் அன்பு நெறிக்கும் இடையே குறுக்கிடும் உயிரற்ற பொருள்களாகக் கபீர் மதிப்பது போல் தாயுமானவர் மதிக்கவில்லை. இவையும் சோபானக் கிரமத்தில் சிகர ஜோதியை அடைவதற்கு உரியனவே என்பது தாயுமான வர் திருவுள்ளம்.

விக்கிரகங்கள் எல்லாம் உயிரற்றன என்றும், அவற் றால் பேசமுடியாதென்றும், அழுது முறையிடுவதைஅவை கேட்க முடியாது என்றும் கபீர்தாசர் கண்டிப்பாகக் கூறியுள்ளார். இதைத் தாயுமானவர் போன்ற சிவநேசர் கள் எப்படி ஒப்புக் கொள்ளமுடியும்? 'திரையைத் தூக்கி நான் கண்டு கொண்டேன்!' என்பது கபீர் வாக்கு. வேதா கமங்களும் வேறு சமய நூல்களும் வேறு வார்த்தைகளே. அவை உண்மையை மறைக்கும் திரைகளே என்பது கபீர் உள்ளம்.

**(திரை தானே விலகி உண்மையைக் காட்டும் என்பது தாயுமானவர் உள்ளம்)**

இத்தகைய மனப்பான்மையை எந்தச் சமயம்தான் ஆதரிக்க முடியும். காசி இந்து வைதிகக் கோட்டை; அதையே தமக்கு இருப்பிடமாகக் கொண்டு கபீர் தம் கொள்கைகளைப் பறைசாற்றத் துணிந்தார் என்றால் இவரை மதவாதிகள் கடுந்தாக்குதல்களுக்கு இலக்காக் கினர் என்பதில் வியப்பில்லை. இத்தகையநிறைதாயுமான வரின் வாழ்க்கையில் ஏற்பட்டிருக்க முடியாது அல்லவா?

கபீரைச் சோதித்து இவர் வேடதாரி என்பதைப் புலப்படுத்த பார்ப்பனர்கள் ஓர் அழகான வேசியை

அனுப்பி வைத்தார்களாம். அவளும் இவருக்குச் சீட ராகிப் பக்திக் காதலே நற்பெருங் காதல் என்பதை உணர்ந்து கொண்டாள் என்பது கதை.

நோய்களை அற்புதமாகக் குணப்படுத்தவல்லவர் கபீர் என்றும் கதைகள் வழங்குகின்றன. அத்தகைய சக்திகள் ஆண்டவனுக்கு உரியன. பிறருக்கு உரியவை அல்ல என்று ஒரு சமயம் சிக்கந்தர்லோடி என்ற சக்கர வர்த்தி முன்னிலையில் கபீர்மீது சிலர்குற்றம் சுமத்தினர் கள். ஆனால் அந்தச் சக்கரவர்த்தி படிப்பும், பண்பாடும் உள்ளவன். தன் மதத்தைச் சார்ந்த பக்தர்கள் அதீத மான செயல்களைப் புரிந்த போதிலும் பொறுத்துக் கொள்ளும் சுபாவம் உள்ளவன். சூபி பக்தர்களுக்கு விசேடமான சலுகைகள் காட்டி வந்தவன். அதனால் கபீரைக் காசியில் வசிக்கக்கூடாது என்றுதான் கட்டளை யிட்டான்; கபீரின் உயிருக்கு ஆபத்து விளைவிக்கவில்லை. இத்தகைய நிகழ்ச்சிகளைத் தாயுமானவர் வாழ்க்கையில் காண முடியாது.

## இறுதிக் காலம்

மேலே சொன்ன நிகழ்ச்சி கபீருக்கு ஏறத்தாழ அறு பது வயது ஆகியிருந்த போது நடைபெற்றது. கி. பி. 1495-ல் இது நிகழ்ந்திருக்க வேண்டும் என்பர். கபீர் வாழ்க்கையின் இறுதிப் பகுதியில் இறுதிப் பெருநிகழ்ச்சி யாக இதைக் குறிப்பிடுகிறார்கள். இதற்குள் கபீரைச் சுற்றிச் சீடர் குழாம் ஒன்று கூடி விட்டது. அவர்களோடு கபீர் வட இந்தியாவின் பல நகரங்களுக்கும் பிரசார யாத்திரை செய்தார். காசியிலிருந்து துரத்தப்பட்டவர் அந்த வாய்ப்பையும் பயன்படுத்திக் கொண்டு தம் கொள்கைகளைப் பரப்பி வந்தார். இந்த நிலையில் கி. பி. 1518-ல் கபீர் மறைந்தார்.

தாயுமானவரின் இறுதிப் பகுதியோ இராமநாதபுரத் தில் கழிந்தது. இராமநாதபுரத்தில் காட்டூரணி என்னு மிடத்தில் தனியாகஒருபுளியமர நிழலில்அமர்ந்துநிட்டை

கூடியிருந்தார். அதற்கு முன்பு அருளையர் என்ற தம் தம்பிக்கும் கோடிக்கரை ஞானியாருக்கும் ஞானோபதேசம் செய்தார். அப்பால் நிட்டை கூடியிருக்கும்போது சுவாமிகளுக்கு வசதிகளைச் செய்ய எண்ணினாள் ஒரு பெண்மணி, அவள் நீர் நிலை ஒன்று அமைத்துப் பூங்கா வளர்த்தாள். அப் பூங்காவில் சுவாமிகளை எழுந்தருளும்படி வேண்டிக் கொண்டாள். சுவாமிகளும் இசைந்து அங்கே ஞான நிட்டையில் அமர்ந்தார். இந்த ஞான நிட்டையிலிருந்து பேசாத பேச்சாகத் தான் இருந்து விட்டன இவரது இறுதி உபதேசங்களெல்லாம்.

இலட்சுமிபுரம் என்று இந்நாளில் வழங்கும் இராமனாத புரப் பகுதியில் ஞான நிட்டை கூடியிருந்தபோது இவரது மேனி உயிர்நீத்த உடம்புபோல் காணப்பட்டதால் யாரோ ஒருவர் அவ்வுடம்பிற்கு நெருப்பிட்டனர் என்பதும் ஒரு செவி வழிச் செய்தி. நிட்டை குலைந்து விழித்து நோக்கிய சுவாமிகள் மீண்டும் அப்படியே அமர்ந்து இறைவனோடு கலந்துவிட்டார். 1601-ஆம் ஆண்டில் என்பது தாயுமானவரின் இறுதிப்பகுதி வரலாறு.

கபீர்தாசர் மறைந்தபின்பு இவரது உடம்பை அடக்கம் செய்ய விரும்பினார்களாம் இந்துக்களும், முஸ்லிம்களும். இந்துக்கள் எரிக்க விரும்பினர்; முஸ்லிம்கள் புதைக்க விரும்பினார்கள். வாதப் போர் முற்றி முதிர்வதற்கு முன் கபீர் சூட்சும வடிவில் அவர்களுக்கு முன் தோன்றிப் பிரேதத்தை மறைத்திருக்கும் துணியைத் தூக்கிப் பார்க்கச் சொன்னாராம். அவர்கள் அப்படிச் செய்தபோது பிணத்திற்கு மாறாக அங்கே மணம் வீசும் ஒரு மலர்க்குவியல் காணப்பட்டதாம்; அதில் பாதிமலர்களை முஸ்லிம்கள் ஓரிடத்தில் புதைக்க, மலர்களின் மறுபாதியை இந்துக்கள் காசிக்குக் கொண்டுபோய்த் தகனம் செய்தார்களாம்.

இரு பெருஞ் சமயங்களிலும் உள்ள பேரழகு வாய்ந்த சாரமான கொள்கைகளுக்கு நறுமணம் ஊட்டி அவற்றைப்பாடிப் பிரசாரம் செய்தார் கபீர் என்பதற்கு ஓர் அறிகுறியான அழகிய கதை என்றாவது இந்த அற்புத நிகழ்ச்சிக்குப் பொருள் கூறலாம் அல்லவா? தாயுமானவரின் இறுதிப் பகுதி வரலாறோ, பொதுவாக இந்து சமயப் பண்பிற்கும் சிறப்பாகச் சைவ சித்தாந்தப் பண்பிற்கும் இசைவாக அமைந்திருக்கிறது எனலாம்.

நிட்டையில் உட்சோதியாக அமர்ந்திருந்தவர், 'ஆன்மாவை நெருப்பும் சுடாது' என்ற தத்துவத்தை நினைவூட்டுகிறார். குலைந்த நிட்டையில் மீண்டும் தொடர்ந்து அமர்ந்து மறைந்தது, இவர் இறைவனோடு இரண்டறக் கலந்து சைவ அத்துவைத மூக்தியடைந்தனர்என்பதற்குச் சான்று என்பர்.

தாயுமானவரும், கபீரும் சக்திக் களஞ்சியமாக ஒவ்வொரு மனிதனுடைய இதயமும் திகழவேண்டும் என்பதை வாழ்விலும் நினைப்பூட்டினார்கள்; சாவிலும் நினைப்பூட்டினார்கள். தங்கள் பாடல்களில் என்றென்றும் நினைப்பூட்டிய வண்ணமாயிருக்கிறார்கள்.

**சக்திக் களஞ்சியம், சக்திக் கனலாகச் சுடர்கின்றது கபீரிடம். தாயுமானவரோ, நீறுபூத்த ஞான நெருப்பு.**

# 2. தாயுமானவர் வரலாறும்-குணாதிசயமும்

தமிழ் நாட்டிலே மிகவும் புகழ் பெற்ற பெயர்களில் ஒன்று 'தாயுமானவர்'. தாயுமானவர் என்றதும் தாயுமானவசுவாமிகள்என்ற பக்தரின்பெயர்தான்நினைவிற்கு வருகிறது. பக்தருக்கு மட்டும் உரியதன்று இப் பெயர். பரமனுக்கும் உரியது என்பதைப் பலரும் அறியார். திருச்சி மலைக் கோட்டையில் கோவில் கொண்டிருக்கும் சிவபெருமானைத் தாயுமானவர் என்றே கூறுவர். இப் பெயர்தான் பக்த மணிக்குப் பெற்றோர்கள் இட்ட பெயருமாகும்.

இறைவன் தந்தையாக இருப்பதுபோல், தாயாகவும் இருக்கிறான். ஏன், தந்தையாக இருப்பதைக் காட்டிலும் தாயாக இருக்கிறான் என்பது சைவ வைணவங்களான இரு வைதிக சமயங்களுக்கும் ஒரு பொதுக் கொள்கை. வைதிகம் என்பது வேத நெறிப்பட்டது என்ற பொருளில்தான் இங்கே உபயோகிக்கப்படுகிறது.

### சிவனின் தாயன்பு

திருச்சிராப்பள்ளியில் சிவபெருமானைத் தாயுமானவர் என்று அழைப்பதற்குக் காரணமாக ஒரு கதையைச் சுட்டிக் காட்டுகிறார்கள். ஒரு காலத்தில் காவிரி ஆற்றின் அக்கரையிலும் இக் கரையிலும் தாயும் மகளும் வசித்து வந்தனர். மகள் பிரசவிக்கும் நிலையிலிருந்தாள். உரிய சமயத்தில் உதவிக்குத் தாய் வருவதாக இருந்தது. தாய் வருவாள் வருவாள் என்று எதிர்பார்த்த

வண்ணமாயிருந்தாள் மகள். ஆற்றிலோ வெள்ளம்; தாயால் ஆற்றைக் கடந்து வரமுடியவில்லை. மகள் மனம் நொந்து சிவபெருமானை வேண்டிக் கொண்டாள். எப்படியாவது தாய் வரவேண்டுமே என்று.

அந்த நெருக்கடியான நேரத்தில் தாய் எப்படியோ வந்து சேர்ந்து விடுகிறாள். மகளுக்கு ஒரே மகிழ்ச்சி; அந்த மகிழ்ச்சிப் பெருக்கில், 'அம்மா நீ எப்படி வெள்ளப் பெருக்கைக் கடந்து வந்தாய்?' என்று கேட்கக் கூடத் தோன்றவில்லை. சுகப் பிரவசம் ஆயிற்று. கரை புரண்டோடிய வெள்ளமும் வடிந்தது. திடீரென்று தாயைக் காணவில்லை. திகைத்தாள் மகள்.

தாய் சிறிது நேரத்தில் வந்து, 'பெண்ணே ஆற்று வெள்ளத்தால் நான் வரத் தாமதமாகிவிட்டது. ஆண்டவன் கருணையால் நீ சுகமாகப் பிரசவித்தது கண்டு மகிழ்ச்சியடைகிறேன்' என்றாள். மறுபடியும் திகைத்தாள் மகள். மகள் சொன்னதைக் கேட்டுத் தாயும் திகைத்தாள்.

ஒருவாறு அவர்களுடைய நம்பிக்கை உண்மையை ஊகித்துக் கொண்டது. முதலில் வந்த தாய் மலைக் கோட்டைச் சிவபெருமான்தான். இப்பெருமானது தாயன்பு இதற்கு முன்பு மதுரை மா நகரிலும் மெய்ப்பிக்கப்பட்டது தான். ஒரே பஞ்சம். பசிக் கொடுமையால் மக்கள் கதறினார்கள். குழந்தை, குட்டிகளும் கதறின. ஒரு பன்றிக்குப் பன்னிரண்டு குட்டிகள். அவை பால் இல்லாமல் தாய் மீது புரண்டன. பன்றியின் வேதனை கூட சிவபெருமானால் உணரப்பட்டதாம். பெண்பன்றியாக வடிவெடுத்துப் பன்றிக்குட்டிகளுக்குப்பால் கொடுத்தாராம். இப்படி மதுரையிலேயே தாயுமானவராகி விட்ட பெருமானுக்குத் திருச்சியில் இப்பெயர் நிலைத்து விட்டது.

## பெயர்ப் பொருத்தம்

இப்பெருமானது பெயரைத் தம் அருமைப் பிள்ளைக்கும் இயற்பெயராகச் சூட்டினார்கள். பெயருக்கும்,

குணத்திற்கும் பெரும்பாலும் நாம் உலகில் ஒற்றுமை காண்பதற்கில்லை. தாயுமானவரின் பெயரோ அவரது தோற்றப் பொலிவிற்கும் குணாதிசயத்திற்கும் ஒருங்கே பொருத்தமாக அமைந்து விட்டது.

திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டைக் கோயில் தமிழர்களுக்குக் கட்டிடக் கலையில் உள்ள தேர்ச்சிக்கு ஓர் அதிசயமான சான்று. தூரத்திலிருந்தே அதைப் பார்க்கலாம். தாயுமான சுவாமியின் விக்கிரகத்திற்கு முன், அவர் கதையைக் கேள்விப்பட்டிருக்கும் எந்தச் சிவபக்தனும் உள்ளம் உருகி, வழிபடாமலிருக்க முடியாது. எத்தனையோ பக்தர்கள் இந்தச் சிவபெருமானை வழிபட்டு ஆறுதல் பெற்றிருக்கிறார்கள். திருஞான சம்பந்தர், 'சிராப்பள்ளிக் குன்றுடையான்' என்று இப்பெருமானைக் குறிப்பிடுகிறார். இக்குன்றுடையானைக் கூற என் உள்ளம் குளிருமே' என்று ஈடுபடுகிறார். திருநாவுக்கரசர் 'சிராப்பள்ளிச் செல்வர்' என்று போற்றியுள்ளார்.

இனி நாம் தேவார காலத்தைப் பின்னே விட்டு, பதினேழாம் நூற்றாண்டின் இடைப்பகுதிக்கு நமது ஞானரதத்தை ஓட்டிச் செல்வோம். ஞானரதம் ஆனதால் இது எங்கு போகும், எங்கு தங்கும்? திருச்சி மலைக்கோட்டையைக் கண்டதும் ஏதோ ஒரு காந்த சக்தியால் இழுக்கப்படுவது போன்ற ஓர் உணர்ச்சியை அடைகிறோம். கோயிலுக்குப் போகிறோம். தொண்டர்கள் ஆடுவதும் பாடுவதுமாயிருக்கிறார்கள். ஆசார சீலர்களாய் வழிபடுவோரையும். அன்பு ஒன்றே துணை எனக் கொண்டு கும்பிடுவோரையும், ஊர் வம்பு பேசி வழிபாட்டைப் புறக்கணித்துப் பொழுது போக்குவோரையும் காண்கிறோம்.

இக்கூட்டத்தினிடையே ஓர் அழகிய சிறுவன் காணப்படுகிறான். நல்ல நிறம், ஒளிமயமான தாமரை முகம், அறிவுக்கதிர் வீசும் கண்கள். அவன் அக்கண்களை மூடித்

தியானத்தில் ஆழ்கிறான். ஆனந்தக் கண்ணீர் முத்துத் துளிகள் போல் வெளிப்படுகின்றன. நமது ஞானரதத்தை வசீகரித்து இழுத்த சக்தியின் மர்மத்தை நாம் இப்போது உணர்ந்து கொள்கிறோம்.

ஒரு நெடிய வடிவம் சிறுவனைத் தேடி வருவதைக் காண்கிறோம். அங்குமிங்கும் பார்த்துப் பையனைக் கண்டு பிடிப்பதையும், 'எவ்வளவு நேரமாகி விட்டது? வீட்டுக்குத் திரும்பவேண்டாமா?' என்று அன்புதோய்ந்த குரலில் கட்டளையிடுவதையும் காண்கிறோம், கேட்கிறோம்.

## தந்தையும்-புதல்வரும்

சிறுவன் வேறு யாருமல்லை. தாயுமானவர் கோயிலில் அதே பெயரைப் பூண்டு நிற்கும் பக்தமணிதான். அன்போடு அவசரமாக அழைத்துச் சென்ற முதியவர் கேடிலியப்பப் பிள்ளை, வேதாரண்யவாசி. தந்தையும், பிள்ளையும் இங்கே வந்து சேர்ந்ததன் பொருள் என்ன? கல்வி. அறிவு, ஒழுக்கங்களிலும் இதயப் பணியிலும்சிறந்தவரான கேடிலியப்பப் பிள்ளை, கஜவல்லி அம்மையை மணந்து வேதாரண்யத்தில் இல்லறம் நடத்திக் கொண்டிருந்தபோது, வேதாரண்யத்துக் கோயிலில் கணக்கராகவும், இறைபணியாளராகவும் வேலை பார்த்தார்.

தமது தமையனார் மகப்பேறு இன்றி வருந்தியதை அறிந்து இவர் தம் ஒரே புதல்வனாகிய சிவசிதம்பரம் என்பவனை அவருக்கு வளர்ப்புப் பிள்ளையாக அளித்து விட்டார். தமக்கு இன்னும் ஒரு ஆண்மகவைச் சிவபெருமான் அளிப்பார் என்பது இவரது நம்பிக்கை.

அது நாயக்க அரசர்களின் காலம். பாண்டிய குலமோ சோழர் குலமோ தலைதூக்காத அக்காலத்தில் விஜயநகர மகாராஜ்யம், சிறப்புற்றுத் திகழ்ந்த நாயக்க அரசர்கள் விஜயநகரத்தின் பிரதிநிதிகளாக,

பாண்டிய நாட்டை ஆண்டு வந்தனர். (1559—1736) திருச்சிராப்பள்ளியிலும் அரசு செலுத்தி வந்தனர், இங்கே அரசாண்ட எட்டாவது தலைமுறை நாயக்க அரசர் முத்துக்கிருஷ்ண நாயக்கன் (கி. பி. 1602). அந்த அரசர் கடலாடும் பொருட்டு வேதாரண்யம் வந்திருந்த போது கேடிலியப்ப பிள்ளையைச் சந்திக்க நேர்ந்தது.

கேடிலியப்பர் முத்துக்கிருஷ்ண நாயக்கனை வர வேற்றுக் கடலாடுவித்தார். தேவாரத் திருமுறையின் பெருமையை இனிது விளக்கிய வேதாரண்யம் என்ற திருமறைக் காட்டுக் கோயிலில் தரிசனமும் செய்வித் தார். கேடிலியப்பரின் பக்தியும் நற்பண்பும் அரசனைக் கவர்ந்தது போல், அவரது அலுவல் திறனாகிய கணக்கு வல்லமையும் அரசனை அதிசயிக்கச் செய்தது.

நாயக்க அரசன் கேடிலியப்ப பிள்ளையைத் திருச் சிக்கு அழைத்துச் சென்றான். தமது அரசாங்கத்திலே **பெரிய சம்பிரதி** (பெருங் கணக்கர்) என்னும் உயர்ந்த பதவியை அளித்தான். கேடிலியப்பர் அரசாங்க அலுவ லுக்குரிய கடமைகளை குறைவின்றிப் புரிந்து வந்தார். கி. பி. 1608-ல் முத்துக் கிருஷ்ண நாயக்கனின் மகன் முத்து வீரப்ப நாயக்கன் பட்டத்துக்கு வந்தான். (கி. பி. 1608—1625) இந்த இரண்டு அரசர்களும் சம்பிரதிப் பிள்ளையின் தொழில் திறமையைப் பெரிதும் மதித்துப் போற்றி வந்தனர்.

அரசாங்க அலுவலைக் குறைவின்றித் திறமையுடன் கவனித்துவந்த கேடிலியப்ப பிள்ளை, திருச்சி மலைக் கோயிலில் எழுந்தருளிக்கும் தாயுமான ஈசனையும் நாள் தோறும் அன்புடன் வழிப்பட்டு வந்தார் தம் மனைவி கஜவல்லி அம்மையுடன். நாளடைவில் கஜவல்லி கரு வுற்று ஆண் மகவு ஒன்றை ஈன்றெடுத்தாள். அதுகண்ட கேடிலியப்பர் 'எல்லாம் தாயுமானவர் அருள்தான்!' என்று தம் மகவுக்கும் அத்திருப் பெயரிட்டார்.

சிறு வயதிலேயே குழந்தை அற்புத அறிவு காட்டி வந்ததாம். தக்க பருவத்தில் கல்விப் பயிற்சி ஆரம்பமாயிற்று. சிறுவரான தாயுமானவர் சிறிது காலத்திற்குள் தாய்மொழியோடு வட மொழியும் கற்றார். தமிழ் இலக்கிய, இலக்கணங்களோடு வடமொழி இதிகாசங்களையும், புராணங்களையும் கற்றுத் தேர்ந்தார். தேவார, திருவாசகங்கள் முதலிய திருமுறைகளையும் கசடறக் கற்றார். அருணகிரி நாதரின் திருப்புகழையும் நன்கு கற்றார். மெய்கண்ட சாஸ்திரம் எனப்பெயர் பெற்ற பதினான்கு சித்தாந்த சாஸ்திரங்களையும் பாராயணம் செய்யத் தொடங்கி விட்டார்.

இவர் வட நூற் கடல், தென் தமிழ்க்கடல் என்ற இரு கடல்களையும் நிலை கண்டு உணர்ந்தார் என்பதற்கு இவர் வாக்கிலேயே சான்று கிடைக்கிறது. 'வடமொழியிலே வல்லான் ஒருத்தன் வரவும், திராவிடத்திலே வந்ததா (க) விவகரிப்பேன்' என்ற செய்யுட் பகுதியை பாருங்கள். அப்படியே தமிழறிஞர்களை மடக்குவதற்காக வடமொழி வசனங்களைச் சரமாரியாகப் பொழிவாராம். ஆனால் இத்தகைய கல்வித்திறன் பயனற்றது என்பதையும் இவர் விரைவில் கண்டு கொண்டார். என்ன ஆச்சரியம்! 'கல்லாத பேர்களே நல்லவர்கள், என்று இவர் ஒரு பாட்டையேதொடங்கி அப்பாடலைச் 'சித்தர் கணம்' என்ற தலைப்பு உள்ள பதிகத்தில் அமைத்துள்ளார்.

பிற சமய நூல்களையும், தருக்க நூல்களையும் தாயுமானவர் கற்றறிந்தார். தமக்கு கிடைத்த சித்தர் நூல்களில் மிகத் தேர்ச்சியடைந்தார். பேசும் திறனை மிகப் பெற்றிருந்ததோடு கவிதா சக்தியும் வாய்க்கப்பெற்றார். கல்வி கேள்விகள் இவற்றால் பண்பட்ட இவர் உள்ளம் சிவாலய தரிசனம் முதலிய அனுஷ்டானங்களில் ஈடுபடத் தெளிவு பெற்றது. பஞ்சாட்சர ஜபம், சிவபூசை முதலிய சைவ ஒழுக்கங்களும் இவரைப் பெரிதும் கவர்ந்தன. இது தாயுமானவரின் இளமைக் காலச் சிறப்பு.

## உத்தியோகத்தில் தாயுமானவர்

அக்காலத்தில் திருச்சிராப்பள்ளியில் ஆட்சி புரிந்தவர்கள் முத்துவீரப்ப நாயக்கனும் அவனுக்குப் பின் அரசியும், அவ்வரசிக்குப் பின் விஜயரங்க சொக்கநாத நாயக்கனும் (1627—1654) ஆவர். முத்துவீரப்ப நாயக்கனின் அரசி 1625 முதல் 1627 வரை ஆண்டு வந்தாள். இக்காலப் பகுதியில் நாயக்கர் அரசாங்கம் சம்பிரதிப் பிள்ளையான கேடிலியப்பரின் பணியை இழக்க நேர்ந்து விட்டது. விஜயரங்க சொக்கநாத நாயக்கன், தந்தையைக் காட்டிலும் புதல்வர் கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கங்களில் சிறந்து விளங்குவதைக் கேள்விப்பட்டு, அந்தப் பெரிய சம்பிரதி வேலையைத் தாயுமானவருக்கு அளித்தான்.

தாயுமானவரும் உத்தியோகத்தை ஏற்றுக்கொண்டு தந்தையினும் திறம்பட அப்பணியை வழுவின்றிச் செய்தார். எத்தொழிலைச் செய்தாலும் முத்தர் மனம் இருக்கும் மோனத்தே! என்கிறார்கள் அல்லவா? அந்த விதமாகத் தாயுமானவரின் உள்ளம் சிவபெருமானின் அருட்பெருக்காகிய வெள்ளத்திலே மூங்கி முழுகிக் கொண்டிருந்தது. இந்நிலையில் ஞான குருவின் தரிசனமும் அருளும் பெரும் நாள் எந்நாளோ?...என்று எதிர் நோக்கியிருந்தது இவர் உள்ளம்.

## குரு தரிசனமும்-நிட்டைப் பயிற்சியும்

அப்போது திருச்சி மலைக்கோட்டை வாசலில் அண்மையில் சாரமா முனிவர் மடத்திலே சாரமா முனிவரின் 17-வது பட்டத்தில், மௌன தம்பிரான் சுவாமிகள் என்ற மௌன குரு (கி.பி. 1594—1658) ஞான மாட்சியுடன் அருளாட்சி பெற்று வந்தார். அந்த மாட்சியில் அம்மடாலயம் சாரமா முனிவர் மடம் என்ற தன் பெயரையும் மறந்து விட்டது; அது மௌனமடம் என்றே வழங்கலாயிற்று. தாயுமானவர் நாள்தோறும் சிராமலைத் தாயான சிவபெருமானை வழக்கம்போல

வழிபட்டுத் திரும்பும்போது மௌனமடத்தின் உள் வாசலின் முன், கோயில் கொண்டிருக்கும் சிவ ஷண்முகக் கடவுளையும் வணங்குவதுண்டு.

ஆதிமடாதிபதியான சாரமா முனிவர் நிஷ்டை கூடி பரிபூரணம் அடைந்த இடத்திலே தான் அக்கோயில் இன்னும் காணப்படுகிறது. அக்கோயில் ஒருநாள் தாயான இறைவனை வழிபட்ட பின் ஷண்முகக் கடவுளையும் வழிபட்டு மீளும்போது தாயுமானவர் மௌன குருவை தரிசிக்க நேர்ந்தது. உடனே அடி வீழ்ந்து இறைஞ்சியதும் குரு இவரைக் கூர்ந்து பார்த்தார். எழுந்திருக்கும்படி கட்டளையிட்டுத் தாம் கையிலிருந்த **சிவஞான சித்தியார்** என்ற நூலைக் காட்டினார்.

சிவஞான சித்தியாரில் ஒரு பகுதியை ஓதி அதன் பொருளையும் இவருக்கு அறிவித்தார். பிறகு அவர் அன்பனே! இன்னும்சில காலம் நீ இந்த உத்தியோகத்தில் அமர்ந்திரு. இல்லறத்தில் ஒழுகி மகப்பேறு அடைந்து பின் இங்கு வருவாய். நாம் மேலும் உபதேசம் செய்வோம் என்றார். இக்குரு தரிசனப் பகுதியை வேறு விதமாகவும் கூறுவதுண்டு. மௌன குரு தேசிகர் திருமூலர் மரபில் வந்தவர் என்ற உண்மையை, தாயுமானவரின் **மௌன குரு வணக்கம்** என்ற திருப்பதிகத்தில் காண்கிறோம்.

சாதாரண உலக மக்களுடன்—அதாவது ஆசை வழியே அடிமையாகிச் செல்லும் மக்களுடன், வீணாக உரையாடாமல் பக்குவ ஞான நிலை உடையவர்களோடு மட்டுமே உரையாடி, உறவாடிய தேசிகராதலின், தாயுமானவரின் குரு மௌன குரு என்று கூறப்படுகிறார். இவரது இயற்பெயர் சிதம்பரநாதத் தம்பிரான் என்று திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடு தெரிவிக்கிறது. இவர் திருமூலரது மரபில் வந்தவராதலால், மூலன் மரபில் முளைத்த மௌனி என்றும் கூறப்பட்டார்.

மௌன குருவைச் சந்தித்தது முதல், தாயுமான வரால் அவரை மறக்க முடியவே இல்லை. சிவஞான சித்தியாரும் கையுமாக இருந்த அவர் இவரை விட்டுப் பிரிந்து சென்றபோதும் இவர் அவரைப் பிரிய மனம் இல்லாமல் பின் தொடர்ந்தாராம். அவர் திரும்பிப் பார்த்து 'சும்மா இரு' என்று சொல்லி விட்டுப் போய் விட்டாராம். இந்த வார்த்தையும் தாயுமானவர் உள் ளத்தை விட்டு அகலவே இல்லை.

'சும்மா இரு'—இரண்டு சாதாரணமான சொற்கள், சின்னஞ்சிறு தமிழ்ச் சொற்கள். ஆனால் தாயுமானவர் செவிகளிலோ, இவ்வாக்கியம் வேத மந்திரம் போல் விழுந்து உட்செவியில் ஒலித்த வண்ணமாயிருந்தது. மௌன குரு வணக்கத்தில் 'ஐய நீ சொன்ன ஒரு வார்த் தையை, நம்பினேன் மலையிலக்காக நம்பினேன்' என்கிறார் நெஞ்சைப் பார்த்து. '**சும்மா இரு மனமே** என்று உனக்குப் போதித்த உண்மையை எங்கே போக விட்டாய்?' என்கிறார்.

நாளடைவில் இவர் மனம் நிலையற்ற உலக விவ காரங்களில் நிலை கொள்ளவில்லை. லௌகிகத் தொழிலை கொஞ்சம் கொஞ்சமாக மறந்தார்; இறுதி யாக முற்றும் மறந்து மெய்ஞ்ஞான நெறியில் நிலையாக முன்னேற விரும்பினார். சிரா மலையின்மேல் ஞான நிட்டைப் பயிற்சி செல்வதில் ஈடுபட்டார். இந்த நிலையில் இவர் பாடியவை திருவருள் விலாச பரசிவ வணக்கம், மௌனகுரு வணக்கம் என்ற பதிகமும், அகிலாண்ட நாயகி பதிகமும் என்பர்.

நாயக்க மன்னன் இவரை உத்தியோகத்தில் அமர்த் திக் கொண்ட போதே இவர் குணங்களை ஒருவாறு அறிந்திருந்தான். பிறர் சொல்லக் கேட்டும் தானே நேரில் கண்டும், இவரது ஞானயோக நிலையை உணர்ந்து இவர்பால் மிக்க பயபக்தி கொண்டான். அரசன் இவரை வணங்கி, அடியேன் தங்களுக்கு வேண்டியதைச் செய்கி றேன்; ஞான நிட்டைக்கு இடையூறு இல்லாமல் தாங்கள்

நடந்து கொள்ளலாம் என்றான். தாயுமானவரோ, அரசாங்க வேலைகளையும் கவனித்துக்கொண்டு ஞான நிட்டைப் பயிற்சியையும் தொடர்ந்து மேற்கொண்டார்.

### ஞானியின் காதல்

ஞான நிட்டையில் அமர்ந்திருப்பவர்களின் உள்ளம் ஈரமும் பசுமையும் அற்ற பாலைவனம் போல், வரண்டு அயர்ந்து கிடப்பதுதான் என்று எண்ணுவது தவறு. உலகியலில் நாம் காணும் காதலைப் பக்திக் காதலாக மாற்றிக் கொள்ளுகிறார்கள் ஞானிகள். அவ்வளவு தான். அவர்களும் மனிதர்களே, அவர்களுக்கும் அன்பு உண்டு. இன்ப உணர்வு உண்டு; அவர்களது அன்புதான் மெய்யன்பு; அவர்களது இன்பம்தான் மெய்யான இன்பம்.

இதயத்திலே சுந்தர வான் ஜோதியாகிய மெய்ப் பொருளைக் காதலிக்கிறது ஞானிகளின் உள்ளம். பைங்கிளிக் கண்ணியில் தாயுமானவர் தன் அகங்கவர்ந்த அண்ணலிடம், 'நீ அல்லல் எல்லாம் சொல்லிச் சுகம் கொண்டுவா' என்று பச்சைக்கிளியைத் தூது அனுப்பு கிறார்.

'ஆருமறி யாமலெனை
அந்தரங்க மாகவந்து
சேரும் படிஇறைக்குச்
செப்பிவா பைங்கிளியே'

என்ற கிளிக்கண்ணியைத்தான் பாருங்கள்.

ஆனால், 'இந்தக் காதலருக்கு ஊரில்லை, பேர் இல்லை. உற்றார், பெற்றார் இல்லை. அவர் என்னை அறிவாரோ?' என்று கிளித்தோழியைக் கேட்கிறார். 'என்று விடியும் இறைவா! ஓ!' என்று தாம் நிற்கும் நிலையை அப்படியே பைங்கிளித் தோழி படம் பிடித்துக் காட்ட வேண்டுமென்று விரும்புகிறார்.

'கண்ணுள்மணி போல் இன்பம்
காட்டி எனைப்பிரிந்த
திண்ணியரும் இன்னம் வந்து
சேர்வாரோ பைங்கிளியே'

என்று பிரிவு ஆற்றாது தோழியிடம் புலம்பும் காதலியைப் பாருங்கள்.

இந்தக் காதலி கூந்தலுக்கு மலர் சூடிக் கொள்வதில்லையாம். 'தலைவரின் வாடாத அடிமலர்என்முடிக்கு வாய்க்குமோ?' என்று கேட்கிறாள் கிளித் தோழியை.

'காந்தம் இரும்பைக்
கவர்ந்திழுத்தால் என்ன அருள்
வேந்தன் எமை இழுத்து
மேவுவனோ பைங்கிளியே'

என்ற வாக்கிலே காதலியின் இதயத்துடிப்பைப் பளிங்கில் வைத்துப் பார்ப்பது போல் பார்க்கிறோம்.

'சொல் இறந்து நின்ற
சுகரூபப் பெம்மானை
அல்லும் பகலும்
அணைவனோ பைங்கிளியே'

என்ற வாக்கையும் கேளுங்கள்.

'மண்ணுறங்கும், விண்ணுறங்கும்; ஆனால் நான் கண் உறங்கேன் காதலால்' என்று தன் நிலையை ஏற்கனவே அறிந்திருக்கும் தோழிக்கு மீண்டும் உரைப்பதைத்தான் பாருங்கள். 'அவரும் வருவாரோ?' என்று ஒரு சமயம் ஏங்குகிறாள். 'மயக்கமெல்லாம் தீர என்னை அண்ணல் வீட்டில் மேவுவனோ?' என்று பெருமூச்சு விடுகிறாள், 'மையல் நோய் தீர்க்க மருந்தும் உண்டோ?' என்கிறாள்.

"நிலவு தவழ் மேடையில் வாழ வைக்காமல் மண்ணான வீட்டில் என்னை வைத்தது என்னோ?' என்கிறாள்.

'கள்ளத் தலைவரவர்
கைகாட்டிப் பேசாகல்
உள்ளத்தில் வந்த
உபாயம் என்னோ பைங்கிளியே'

என்று இக்காதற் கண்ணிகள் முடிவு பெறுகின்றன.

இது மகா ஞானியான தாயுமானவர் அடிகள் காதலியாகி நின்று, தம் தூய ஞான பக்திநிலையை வெளியிட்டுக் கொள்ளும் முறை என்றால் ஞான நிட்டை புரிவோரின் உள்ளத்தைப் பாலைவனமாகக் கருதாது ஓர்அற்புத சோலைவனமாக அல்லவா கருத வேண்டும்!

இந்த நிலையை ஓர் அளவு நாயக்க அரசனும் புரிந்து கொண்டான். புரிந்து கொண்டே இத் தொண்டருக்குத் தொண்டு புரிந்தான் என ஊகிக்கலாம். அரசன் உலக வாழ்வை நீத்தபின் அவனது பட்டத்தரசி—இவள் பெயர் மீனாட்சியம்மை என்பர்— கி.பி. 1625 முதல் இரண்டு, மூன்று ஆண்டுகள் அரசு வகித்ததாகத் தெரிகிறது. இவள் தாயுமானவரின் நிலையை உள்ளபடி புரிந்து கொள்ளவில்லை. இவர் தோற்றப் பொலிவால் பெரிதும் கவரப்பட்டு இவர் மீது பேராசைக் காதல் கொண்டாள்.

தாயுமானவரும் தன்னிகரில்லாத் தலைவரைக் காதலிக்கும் ஒரு காதலிதான் என்பதை இப் பெண் எப்படி அறிவாள்? தன் உடல், பொருள், ஆவி மூன்றையும் இவருக்கு அர்ப்பணம் செய்வதாக நாணாமல், கோணாமல் துணிந்து உரைத்தாள். இச்சொற்கள் பழுக்கக் காய்ச்சிய நாராம்சம் போல் தாயுமானவர் காதில் விழுந்தன. இவர் அவளுடைய தீய எண்ணத்தை உணர்ந்ததும் திடுக்கிட்டார். அவளுக்கு ஏற்ற புத்திமதிகளைக் கூறினார். இனி தாம் அங்கிருப்பது தகாது என்றும் தீர்மானித்தார்.

## யாத்திரை

உடனே தம் உத்தியோகத்தை விட்டு விட்டார்; அன்று இரவே தம் சிறிய தாயாரின் புதல்வராகிய அருளைய பிள்ளையோடு திருச்சிராப்பள்ளியினின்றும் புறப்பட்டார். தென் திசை நோக்கிச் சென்றார். செந்தமிழ் நாடாகிய பாண்டிய நாட்டில் உள்ள இராமனாத புரத்தில் தங்க வேண்டுமென்பது சுவாமிகளின் திருவுள்ளம்.

வழியில் அருளையரும், தாயுமானவரும் விராலி மலையை அடைந்தனர், அங்கே தங்கியிருந்தபோது சித்தர்களுடைய கூட்டுறவில் சில நாள் கலந்திருந்தார். அப்போது சித்தர்கணம்முதலிய பதிகங்களைப் பாடினார். பின்பு அங்கிருந்து புதுக்கோட்டைக்கு அருகிலுள்ள கோகர்ணம் என்ற கயிலை நகரைச் சென்றடைந்தார். அங்கே வீற்றிருக்கும் பெரிய நாயகி அம்மை மீது **பெரிய நாயகி அம்மை பதிகம்** பாடினார். கடைசியாக இராமேசுவரம்சென்று இராமனாதரை வணங்கி மலைவளர்காதலி என்ற அம்மை சந்நிதியிலும் வழிபட்டார், அப்போது மலைவளர் காதலி என்னும் பதிகம் பாடப்பட்டது,

தாயுமானவரும், அருளையரும் இராமேசுவரத்தில் இருப்பதாகத் தமையனார் சிவசிதம்பரம் பிள்ளைக்குச் செய்தி எட்டியது. திருச்சிராப்பள்ளியில் நிகழ்ந்ததும் அவர் காதில் விழுந்தது. அவர் வேதாரண்யத்திலிருந்து உடனேபுறப்பட்டு இராமேசுவரம்வந்துதம்பிமார்களைச் சந்தித்தார்; சந்தித்து அவர்களை அழைத்துக் கொண்டு வேதாரண்யம் சென்றார்.

## இல்லறமும்-துறவறமும்

தாயுமானவர் வேதாரண்யத்தில் வசிக்கும் போது தாயார், தமையனார் கருத்துக்கும், ஏற்கனவே மௌன குரு கூறியிருந்த வாக்கிற்கும் இணங்கி மணஞ் செய்து

கொண்டார். இவர் மனைவி பெயர் **மட்டுவார் குழலி.** அவள் ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தாள். அக்குழந்தைக்குக் கனக சபாபதி என்று பெயரிட்டார். இல்லற வாழ்க்கையில் இருக்கும் போதும் உள்ளத்துறவுதான்; பல பதிகமும், பாடல்களும், கண்ணிகளும், பாடுவதிலும் பக்தி பண்ணுவதிலும் பெரும் பொழுதைக் கழித்தார்.

சில ஆண்டுகளில் வாழ்க்கைத் துணைவியான மட்டுவார்குழலி இறைவன் திருவடி நிழலை அடைந்தாள். அதன்பின் இவர் தாயாரும் விண்ணுலகு எய்தினள். இப்பொழுது குருவின் திரு உள்ளமும், இறைவன் திரு உள்ளமும் நன்கு புரிந்து விட்டன. தாயுமானவர் தமது செல்வங்களையும் செல்வக் குமரனையும்தமையனாரிடம் ஒப்புவித்தார். பிறகு கடுந்துறவு பூண்டுவெளியேறினார். அருளையரும் அடிகளைப் பின் தொடர்ந்து இவருக்குத் தொண்டு பூண்டு ஒழுகுவதே தமக்குக் கதியும், விதியுமாகும் என்று நம்பிப் புறப்பட்டார்.

## மீண்டும் குருதரிசனம்

மௌனகுரு சுவாமிகள் தாமே இப்பொழுது தாயுமானவரிடம் வந்து இவர் அடைந்துள்ள பரிபக்குவமான நிலைகண்டு ஒருயோக முறையை உபதேசித்தார் என்பது ஒரு வரலாற்றுத் துணுக்கு. தாயுமானவரே தவக்கோலத்தில்திருச்சிராப்பள்ளிமலைக்கோட்டை மௌனமடத்தை மீண்டும் அடைந்து ஞானோபதேசம் பெற்றார் என்றும் சிலர் கூறுவர். கி. பி. 1644-ஆம் ஆண்டு தொடங்கிக் கொஞ்ச காலம் மௌனமடத்திலேயே தங்கித் தாயுமானவர் குருவழிபாட்டில் ஈடுபட்டிருந்தாராம். பிறகு சிவத்தல யாத்திரை தொடங்கினார் என்றும் இறுதியாக இராமனாநாதபுரத்தில் அருளையரோடு தங்கியிருந்தார் என்றும் சொல்லுகிறார்கள்.

இல்லறத்திலிருந்த போதும் குருவுடன் மடத்தில் தங்கிய போதும்,தாயுமானவர் உள்ளம் தாமரைஇலைத்

தண்ணீர் போல் பற்றியும், பற்று இல்லாததாகவும் இருந்தது. சில சமயங்களில் ஆசைகளை அடக்குதல் இக் கடுந் துறவிக்கும் சிரமமாகத் தோன்றியது போலும். இத்தகைய குறைபாட்டையும் பக்தர்கள் தங்கள் பாடல்களில் ஒப்புக்கொள்ளக் கூசுவதில்லை. தாயுமானவர் சிறிதும் ஒளிவுமறைவு இன்றி, தம் திருப்பாடல்களில் தமது குறைபாடுகளைக் குறிப்பிட்டுள்ளார்.

## இவரது குணமாட்சி

இத்தகைய சொந்த அனுபவங்களைக் கொண்டுதான் ஞானிகள், மற்றவர்கள் தீய செயல்களில் தலையிட்ட போதும் அவர்களை நிந்திக்கமாட்டார்கள்; கருணையில்லாது கண்டிக்கவும் மாட்டார்கள். அவர்களது அறியாமையைப்பற்றி இரங்குவார்கள்; துக்கிப்பார்கள். தாயுமானவரிடம் தம் குற்றம் காணாது பிறர் குற்றங் காணும் கீழ்மைக் குணம் சிறிதும் காணப்பட்டதில்லை. நல்லாரையும், பொல்லாரையும் இவரது ஞானபக்திநெறி ஒருங்கே அணைத்துக்கொண்டு எல்லாரையும் இன்ப நிலையில் வாழ்விக்க முயன்றது.

தமது அருள் வழியிலும், ஞான வழியிலும், பக்தி வழியிலும் தமக்குக் கிடைத்த ஆன்ம அமைதியையும் பேரின்பத்தையும் பிறருடன் பங்கு கொள்ளவே விரும்பினார் இந்த சிவ யோகி.

'பாடும் கருணைப் பரஞ்சோதி
அருளைப் பெறுதற்கு அன்புநிலை
தேடும் பருவம் இதுகண்டீர்
சேர வாரும் செகத்தீரே!'

என்று இவர் அறைகூவிப் பறைசாற்றுவதைக் கேளுங்கள்.

சிவபோகம் என்னும் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாயிருக்கக் கண்டவர், அதைத் தனியே அனுபவிக்க விரும்பவில்லை.

"ஏக உருவாய்க் கிடக்குதையோ!
இன்புற் றிடநாம் இனியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாரு செகத்தீரே!'

என்று கூவி முழக்குவதையும் கேளுங்கள்.

"தான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்பது இவர் மனநிலை. இம் மனப்பான்மை உள்ளோருக்கு 'என் தெய்வம் உன் தெய்வம்' என்பது போன்ற பேத புத்தி இருக்க முடியாதல்லவா?

'வேறுபடும் சமயம் எல்லாம்
புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளே! நின்
விளையாட்டு அல்லால்
மாறுபடும் கருத்தில்லை;
முடிவில் மோன
வாரிதியின் நதித்திரள்போல்
வயங்கிற்று அம்மா!'

என்ற வாக்கில் தாயுமானவரது சைவ சித்தாந்தம் எத்தகைய விசாலமான இதயப்பான்மையைப் பெற்றிருக்கிறது பாருங்கள்.

தாயுமானவர் கி. பி. 1661 தை மாதம் திங்கட்கிழமை விசாகத்தன்று மாலை முக்தியடைந்தார். ஆங்கில மாதமும் தேதியும் பிப்ரவரி 9-ம் நாள் என்று இராமனாதபுரத்துக் காட்டூரணி என்ற இலட்சுமிபுரத்திலுள்ள சமாதி இடத்தில் எழுதப்பட்டுள்ளது.

# 3. இவர் வாக்கிலே காணும் வாழ்க்கை

தாயுமானவர் பாடல்களின் தொகை 1452. தமிழ் மாலையாக 587 ; கண்ணிகளாக 865. தவிர அகவல் வண்ணம் இரண்டு.

பரம்பொருளைக் குறித்துக் கவி ரவீந்திரர் 'நீ பாட்டைப் போல எளிமையானவன்' என்று கூறியுள்ளார். தாயுமானவர் பாடல்களுக்கும் இவர் காட்டும் பரம் பொருளுக்கும் கவி ரவீந்திரரது வாக்கு நன்கு பொருந்தும்.

எளிமையோடு கம்பீரமுமான நடையும் வாய்ந்தன தாயுமானவர் பாடல்கள், சீவனற்ற சொற்களும் சொற்றொடர்களும் பிணத்தை அணி செய்வதுபோல அவற்றை அணி செய்யும் எதுகை மோனைகளும், பொருளற்ற சொல்லிடுக்குகளும் இவர் பாடல்களில் காணப்படவில்லை. சொல்லில் இல்லாத இன்பத்தையும் அழகையும் கவிஞனின் சொற்சேர்க்கையாகிய சொற்களை காட்டுகிறது என்று கூறுவதுண்டு. தாயுமானவர் காட்டும் பேரின்பம் கவிதைப் பேரின்பமாகவும் உருவெடுத்திருக்கிறது. இவர் காட்டும் அழகு உள்ளத்தை உருக்கித் தூய்மை செய்யும் அழகாகும்.

### தாயுமானவரின் தமிழ்

இவர் தமிழ் பிறமொழிக் கலப்பில்லாத தூய தமிழ் அன்று. இதில் வடமொழிக் கலப்பு அதிகம் எனினும் தமிழர் செவிகளுக்கு இனிமையாகவே தமிழுடன் வடமொழியையும் கலந்து ஓசைப் பொலிவுடனும் கவிதைக்

குரிய இசைப் பண்புடனும் தாயுமானவர் பாடல்கள் பாடியிருக்கிறார். கண்ணிகளில் சிறப்பாக இவர் தமிழின் இசைப்பொலிவை உணர முடிகிறது.

ஜீவ நாடியைத் துடிக்கச் செய்து, உள்ளத்தை "உறங்காதே; நான் சொல்வதைக் கேள்!' என்று தட்டி எழுப்பித் துணிவு புகட்டும் இயல்பு வாய்ந்த பாடல்களில் ஓசைப் பொலிவையோ, கவிதைக்குரிய இசைப்பண்பையோ, நாம் உடனடியாக அனுபவிப்பதற்கில்லை. வைணவ உரையாசிரியர்களின் மணிப்பிரவாள நடை போன்றதன்று தாயுமானவரின் நடை என்று சிலர் கூறக் கேட்டிருக்கிறேன். திருப்பனந்தாள் மடத்து வெளியீடாகக்குறிப்புரையுடன்வந்திருக்கும் 'தாயுமானவசுவாமிகள் பாடல்' என்ற நூலிலும் ஓர் அறிஞர் இக்கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

'வடமொழியையும், தென்மொழியையும் மணியும் பவளமும் போலக் கலந்து ஒரு மொழியை உண்டாக்குகிறார்கள் வைணவர்கள்' என்கிறார் இவர். அம்மொழியில் பொருட்செறிவு இருந்தாலும் ஓசை இனிமை இல்லை' என்றும் கூறியுள்ளார். சரி; வைணவ உரையாசிரியர்களின் நடையை மணிப் பிரவாளம் என்று சொன்னது யார்? வைணவ ஆசிரியர்களோ உரையாசிரியர்களோ அப்படிச் சொல்லவில்லை. நாம் ஆங்கிலமும் தமிழும் கலந்து பேசுவது போல், அவர்கள் தமிழையும் வடமொழியையும் கலந்து பேசிக் கொண்டார்கள் என்று சொல்ல முடியாது.

பெரிய வாச்சன்பிள்ளையை வியாக்கியான சக்கரவர்த்தி என்று வெ. பா. சுப்பிரமணிய முதலியார் போன்ற தமிழ்ப் பேரறிஞர்களும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். அவர் வியாக்கியானத்திலும் ஈடு வியாக்கியானத்திலும் நாம், தாயுமானவர் பாடல்களில் எதிர்பார்ப்பது போல, கவித்திறனை எதிர்பார்க்கவில்லை. அங்கே பொருட் செறிவைத்தான் எதிர்பார்க்கிறோம்; அது நமக்கு அற்புதமாகக் கிடைத்து விடுகிறது.

அது, மணியும் பவளமும் கலப்பது போல் தமிழும் வடமொழியும் கலந்ததன்று; அழகுக்காகவோ, ஓசைக் காகவோ அமைந்திருக்கும் நடையும் அன்று அது. பொருட்செறிவு, பொருளாழம், விஷய கௌரவம் இவ் வளவுதான் அந்த நடையின் பொருளும் பயனும். இதை நன்குணர்ந்து கொண்டால், வைணவ உரையாசிரியர் களின் நடையோடு தாயுமானவர் தமிழை ஒப்பிட்டுப் பார்க்கத் தோன்றாது.

ஆனால் வைணவ உரையாசிரியர்களின் வாக்கிலே அவர்களது உயிர்நிலைக்கொள்கைகளைக் காண்பதோடு அக்கொள்கைளை ஒட்டி வாழ்ந்த வாழ்க்கையையும் காண்கிறோம். தாயுமானவர் வாக்கிலும் நாம் காண்பது வாழ்க்கை. ஆனால் கவிதையோடு இசைந்த தத்துவப் பெருவாழ்க்கை இது. அவர்கள் கருத்துக்களை மிகை இன்றிக் குறை இன்றி அந்தத் 'தமிழ்' நடை வெளியிடு வதுபோல், தாயுமானவர் கருத்துக்களையும் அக்கருத் துக்களுக்கு இசைந்த வாழ்க்கையையும் இக்கவிதை நடை புலப்படுத்துவதைக் காண்கிறோம்.

இந்தத் தமிழரை இவர் தமிழிலிருந்து பிரித்துப் பார்க்க முடியாது; அப்படியே அந்தத் தமிழிலிருந்து அத் தமிழர்களையும்பிரித்து இனங்கண்டு கொள்ள இயலாது. இவர் தமிழ் இவரை மறைக்கும் திரையன்று; 'ஆள் பாதி, ஆடை பாதி' என்பது போல் இவரை எடுத்துக் காட்டும் ஆடை தான். வைணவ உரையாசிரியர்களின் பாஷையும் அவர்களைத் திரையிட்டு மறைக்கவில்லை; அவர்களை நன்கு புலப்படுத்தும் பொன்னாடைதான்.

தாயுமானவர் பாடல்களைத் தமிழ் உபநிடதம் என்று கூறுவது பொருத்தமே. இதன் பொருள், உபநிட தத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு என்பதன்று; உபநிடத ஞானத்தில் ஊன்றி நின்ற வாழ்க்கையின் தமிழாக்கமே தாயுமானவர் பாடல்கள் என்று சொல்ல வேண்டும்.

அடிகளார் உபநிடத வேதாந்தத்தை மட்டுமல்ல; வேறு வடநூல்களையும் விரும்பிப் பயின்று தமது வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலையை விளக்கிக் காட்ட அந்த அறிவையும் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். இவரது வடமொழிப் பயிற்சி சாதாரணமானதன்று என்பதையும் வடசொற்களைப் பொருள் அறிந்து பயன்படுத்திக் கொண்டிருக்கும் இவரது வாக்கை மெய்ப்பிக்கிறது. அறிவு வேட்கையால் அல்ல; அருள் வேட்கையால் இவர் வடமொழி நூல்களையும் நெறிகளையும் கசடறப் பயின்றிருக்கிறார்.

## இவரை வசீகரித்த நூல்கள்

அறிவு பிறந்த நாள் தொட்டு இவர் அருள் வசப் பட்ட உள்ளத்தினராக வளர்ந்து வந்திருக்கிறார். தேவா ரத்தில் இவருக்கு உள்ள ஈடுபாடு ஒரு தனிச்சிறப்பு வாய்ந்தது. திருஞானசம்பந்தரின் பண் சுமந்த பாடல் களையும், சுந்தரரின் தோழமைப்பேச்சான பாடல்களை யும், அப்பரின் அருள் நலம் கனிந்த பாடல்களையும் இளமை தொட்டு பயின்றுவந்திருக்கிறார் தாயுமானவர். 'மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொல்லும் தமிழ்' என்பது தேவாரத்தைக் குறிக்கும் இவர் தமிழ். குழந்தை தித்திப்பதை விரும்புவது போல் இவரும் தேவாரத் தமிழை அனுபவித்திருக்கிறார் என்பது குறிப்பு.

திருவாசகமும் இவர் உள்ளத்தை உருக்கி இவருக்குப் புத்துயிரளித்திருக்க வேண்டும். மாணிக்க வாசகரை இவர் 'வாதவூர் உத்தமர்' என்று குறிப்பிடுகிறார். மனம் கரைத்து மலம் கெடுக்கும் 'திருவாசகம் போல்' இவர் பாடல்களும் கருங்கல் மனத்தையும் கரையச் செய்து, ஆணவ மலத்தைப் போக்கக்கூடியன என்பதைத் தாயு மானவர் அடிகளின் சில பாடல்களையாவது ஓதி உணர்ந் திருப்பவர்களுக்கு நன்கு புலனாகக் கூடியதே.

மெய்கண்ட சிவத்தின் சித்தாந்தத்தில் இவருக்குள்ள ஈடுபாடும் இவர் வாக்கில் இனிது புலனாகிறது.

"பொய் கண்டார் காணா
புனிதம்எனும் அத்துவித
மெய்கண்ட நாதன் அருள்
மேவுநாள் எந்நாளோ?'

என்ற வாக்கே இவருக்குச் சித்தாந்த சைவத்தின் மேலுள்ள பெரும் பற்றுக்குச் சான்றாகும்.

இப்படியே அருள் நந்திசிவம், மறைஞான சம்பந்தர் முதலியவர்களைப் போற்றுவதைக் காண்கிறோம். தமது மௌன குருவின் மூல புருஷரான திருமூலரை 'தவராச யோகி' என்றும் 'சக்கரவர்த்தி' என்றும் சுட்டிக் காட்டுகிறார். அருணகிரிநாதரையும், அவர் பாடிய கந்தர் அநுபூதியையும் இவர் போற்றுவதிலிருந்து, அருணகிரியாரின் திருப்புகழ் பாடல்களும் பிற பாடல்களும் இவரது உள்ளத்திற்கு ஞானப்பால் ஊட்டி இவரை வளர்த்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. பட்டினத்தாரின் வைராக்கியத்தையும் பாராட்டுகிறார்; சிவ வாக்கியரின் ஞானக் காட்சியையும் போற்றுகிறார்.

தம் காலத்தில் வழங்கிய வேறு தமிழ் நூல்களையும், இலக்கண இலக்கியங்களையும், முக்கியமாக வடமொழியிலும் தாய் மொழியிலும் உள்ள அருள்நலம் கனிந்த நூல்களையும் இவர் கற்றுக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்திருக்கிறார். சிறந்த நூல்களை நாவினால் மட்டும் இவர் பாராயணம் செய்தார் என்றும் சொல்வதற்கில்லை.

'ஊன்படிக்கும் உளம்படிக்கும்,
உயிர்படிக்கும், உயிர்க்குயிரும்

தான்படிக்கும்.'

என்ற அனுபவத்தை இராமலிங்க அடிகளைப்போல் தாயுமானவர் அடிகளும் பெற்றிருந்தார் என்று துணிந்து கூறலாம்.

நூல்களைப் பாராயணம் செய்வோர் அவற்றை வாழ்க்கையிலும் பாராயணம்செய்துவிட்டார்கள் என்று சொல்லும்படி அவர்கள் வாழ்க்கை அமைந்திருக்க வேண்டும் என்பர். கீதாபாராயணம் செய்துவருவதாக ஒருவன் சொல்லித் தெரிந்து கொள்வதைக் காட்டிலும், அவன் முகப்பொலிவே அதை அறிவித்துவிடும் என்று கூறுவதுண்டு. இது 'தாயுமானவரைப் போன்ற பேரறி வாளர்களுக்கெல்லாம் பொருந்துவதுதான்.

இளமை தொட்டுத் தாயுமானவர் கற்று வந்த அருள் நூல்கள் எல்லாம் இவர் வாழ்க்கையை வசமாக்கி மலரச் செய்திருக்க வேண்டும் "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்றபடி தாயுமானவரது தோற்றப் பொலி விற்கு இவரது ஞானசௌந்தரியம் உள்ளுறை உயிராக அமைந்திருந்தது எனலாம்.

## வாக்கு வளமும்-வனப்பும்

இவரது உருவ எழிலைக்கூட இவர் கவிதை, கண்ணாடியில் காட்டுவது போல நமக்குக் காட்டி விடுகிறதோ?— என்று நான் இவர் பாடல்களை ஓதி ஓதி உணரும்போது சில சமயங்களில் ஐயுறுவதுண்டு. அத்த கைய வாக்கு வனப்பையும், வளத்தையும் இப்பாடல்களில் காண்கிறோம். தத்துவ நூல்களின் சிக்கலான உண்மை களை, இந்த வாக்கு வளம் எத்தகைய சாதாரண மொழி களால் விளக்கிவிடுகிறது.

தாயுமானவர் பாடல் தொகுதி சிவசக்தி வடிவாகிய அம்மையப்பர் வணக்கத்துடன் தொடங்குகிறது. இவ் வணக்கம் கூறும் விருத்தப் பாட்டு,

"அங்கிங் கெனாதபடி எங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்தது எது?'

என்று தொடங்குவதைக் காண்கிறோம்.

எங்கே பார்த்தாலும்ஒளி, ஆனந்தம், அருள். அம்மையப்பரை உலகுக்கு எல்லாம் அம்மையப்பர் என்று அறிவிக்கின்றன. அண்டங்கள் எல்லாம் விண் வெளியில் காணப்பட்ட போதிலும், அதி நுட்பமான அம்மையப்பரின் அருள் வெளிக்குள்ளே தங்குகின்றன. அவற்றின் மீது அவருக்குள்ள இச்சை அதுஎன்கிறார் தாயுமானவர்.

உயிர்க்கு உயிராய்த் தழைத்த வண்ணமாயிருக்கும் மெய்ப்பொருளை அம்மையாகவும் அப்பராகவும் வழிபடுவதில் பக்தர்களுக்குச் சிறப்பாக ஒருவிதமன நிறைவு ஏற்படுகிறது. மெய்ப்பொருள் என்பது அதி சூட்சுமமான தத்துவ சிந்தனைகளுக்கு மட்டும் உரிய பொருள் அன்று; குழந்தை தாயைத் தீண்டி இன்புறுவதுபோல்'

"தாயிலானைத் தழுவும் என்
ஆவியே'

என்ற அனுபவத்திற்கும் பக்தர் உள்ளம் ஆசைப்படுகிறது.

இப்படித் தத்துவ சிந்தனைகளுக்குக் கலை உருவம் கொடுப்பதில் மற்ற பக்தர்களைப்போல் தாயுமானவரும் தமது வாக்கு வளத்தையும் வனப்பையும் பயன்படுத்திக்கொள்ளுகிறார். ஆனால் நுட்பமான தத்துவ சிந்தனைகளோடும், இவர் கொஞ்சிக் குலாவ ஆசைப்படுகிறார்.

"பார்க்கும் இடம் எங்கும் ஒரு
நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணாநந்தமே.'

என்று இவர் பார்க்கின்ற அந்தப் பொருளை ஒரு கலை உருவமோ சிலை உருவமோ மட்டும் எப்படிக் காட்ட முடியும்?

வளமும் வனப்பும் உள்ள இவரது வாக்கிலே ஞான வளமும் பக்தியின் அழகும் நன்கு புலப்படுகின்றன. தம் குறைகளையும் இத்தகைய வாக்கில் வெளியிட்டுப் "பரிபூரண ஆனந்தமே! என் குறைகளை நீயே பார்த்துக் கொள்' என்றும் முறையிட்டுக் கொள்கிறார். அக்குறை களில் வாசா கைங்கரியமும் ஒன்று.

தாயுமானவர் உபயோகிக்கும் அர்த்த புஷ்டியுள்ள வட சொற்றொடர்களில் இதுவும் ஒன்றாகும். கைங் கர்யம் என்றால் பணிபுரியும் செயல்தானே. கைங்கர்யத் தைப் பேசித் தீர்த்துவிட முடியுமா? சங்கீதத்தைப் பேசி விடுவது போலத்தான் கைங்கர்யம் பற்றிப் பேசித் திருப்தி அடைவதும்!

"ஏன் கைங்கர்யம் புரியவில்லை?' என்ற கேள்விக்கு, "துறவு நெறியில் தமக்கு இச்சை உண்டாகி விட்டது' என்று விவகரிப்பாராம். இப்படிப்பேசி அலுத்துத் தூங்கும்போது இதைப்பற்றிய நினைவும் மறந்து போகிறது என்கிறார். "நித்திரை கொள்கிறாயே, விழியாத நித்திரை ஒன்று இருக்கிறதே!' என்று மரணத்தை நினைத்துக் கொண்டாலோ, நெஞ்சம் துடித்து அயர்ந்து போகிறதாம்.

'பேசாத ஆனந்த நிட்டைக்கு' ஆசைதான். ஆனால். அதற்கும் பேதைமைக்கும் வெகு தூரமே என்கிறார். இத்தகைய குணத்தைப் 'பேய்க்குணம்' என்றும் குறிப் பிடுகிறார்.

'பேய்க்குணம் அறிந்து இந்த
நாய்க்குமொரு வழிபெரிய
பேரின்ப நிட்டை அருள்வாய்.'

என்ற முறையீட்டை, "தம்மை எங்கும் சூழ்ந்து கொண்டிருக்கும் பரிபூரணானந்தத்தை நோக்கிச் செலுத்துகிறார்.

திறந்த வாசல் தோறும் நுழைந்து நுழைந்து பார்த்தாலும் நாய்க்கு வேறு புகலிடம் ஏது? உடையவன் தானே அதை ஆட்கொள்ள முடியும்? அந்த உடையவன் வெகு தூரத்தில் இல்லை; எங்கேயோ பரமண்டலத்திலோ, பரம பதத்திலோ தான் இருக்கிறான் என்பது இல்லை. 'பார்க்குமிடம் எங்குமொரு நீக்கம் அற நிறைகின்ற பரிபூரணானந்தமே!' என்று திரும்பத் திரும்பக் கூவிக் கூவி அழைக்கிறார்.

இந்த நிலை கெட்ட உடம்பு இருக்கும்போதே நிலையான மெய்ப்பொருளினைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்கிறார். இதற்கு உதவாத உடம்பு சோற்றுத் துருத்தி என்கிறார். அன்னமயகோசம் என்ற அழகான, வாய் நிறைந்த, வட சொல்லோசையைப் பயன்படுத்திக் கொண்டிருக்கலாம், உடம்பைக் குறிப்பிடுவதற்கு. ஆனால் சோற்றுத் துருத்தி என்ற தமிழ்ச் சொற்றொடரே இங்கு பொருந்துவது.

எனவே, தமிழ் வராமல் வடமொழியை உபயோகிக்கிறார் என்றும், வடசொல் வராததால் தமிழைப் பயன்படுத்திக் கொள்கிறார் என்றும் தாயுமானவரைக் குறித்துச் சொல்ல முடியாது. பொருத்தமான பதம் பொருத்தமான பொருளைக் குறிக்க பொருத்தமான சமயத்தில் வந்து குதித்து விடுகிறது இவர் வாக்கிலே; அப்படிப் பணி புரிகின்றாள் நாமகள் இவர் நாவிலே. இவர் ஞான வேகத்திலே வசனிக்கும்போது (வசனம்தான் பாட்டாக வருகிறது சில இடங்களிலே) எது வடசொல்? எது தமிழ்? என்று பார்க்கத்தான் இவருக்கு அவகாசம் எங்கே?

எத்தனையோ இயற்கை அற்புதங்கள். ஆழ்கடல் கரையின்றி நிற்கிறது; அந்தரத்திலே அகிலகோடி நிலை கொள்வதையும் காண்கிறோம். மேகம்சஞ்சாரமாகிறது. இத்தகைய இயற்கை அற்புதங்களுடன் புராண உலகிலும் அற்புதங்களைப் பார்க்கிறார். கொடிய நஞ்சு அமு

தாகிறது சிவபெருமானுக்கு. மேருவும்வில்லாக வளைந்து கொடுக்கிறது. இராமனது பாத தூளி கல்லைப் பெண் ணாக்குகிறது. மருந்துகளாலும் மணி மந்திரங்களாலும் சித்திகள் சித்திக்கின்றன. இப்படியெல்லாம் இருக்கும் போது:

'பாழான என்மனம்
கூவியஒரு தந்திரம்
பண்ணுவது உனக்கு அருமையோ?'

என்று கேட்கிறார். யாரை? அந்தப் பரிபூர்ண ஆனந்தத் தைத்தான்!

## இவர் கண்ட உலகம்

தாயுமானவர் வாழ்ந்த காலத்தில் தமிழ்நாடு விஜய நகர ஆட்சியில் இருந்தது. விஜயநகர அரசர்கள் ஆந்திர ராயினும் தமிழர்களின் தாய்மொழி தமிழே என்பதைப் புரிந்துகொண்டு இம் மொழியையும் ஆதரித்தார்கள். இந்தியாவின் பொது மொழியாகிய வடமொழிக்கும் பேராதரவு காட்டினார்கள். வேதங்கள், ஆகமங்கள், உபநிடதங்கள், தர்ம சாஸ்திரங்கள், புராணங்கள் முதலியவற்றில் பயிற்சி பெற அங்கங்கே ஆந்திர நாட் டிலும், தமிழகத்திலும் கல்வி நிலையங்கள் இருந்தன.

'வேத உபநிடதங்களை வாலாயமாகப் படிப்பதற் குரியார்கள் என்றவர்கள் மட்டும் அல்லாமல், மற்றவர் களும் வடமொழி பயின்று அப் பெருநூல்களைக் கற்று வந்திருக்கிறார்கள்' என்று திருப்பனந்தாள் வெளி யீடான 'தாயுமானவ சுவாமிகள் பாடல்' என்ற நூலில் ஆராய்ச்சிக் குறிப்பு என்ற தலைப்பில் திரு. கீ. இராம லிங்க முதலியார் எழுதியிருப்பதை நானும் ஒப்புக் கொள்ளுகிறேன்.

தாயுமானவர் காலத்திற்கும் பிற்பட்ட காலத்தில் சுமார் இருநூறு முந்நூறு ஆண்டுகளாகத்தான் பார்ப்

பனர் அல்லாதார் வடமொழி பயிற்சி பெறுவது நின்று போயிருக்க வேண்டும். அருணகிரி நாதரைப்போல் தாயு மானவரும் வடமொழி நூல்களைக் கசடறக் கற்றிருந் தார் என்று ஊகிக்கலாம்.

கல்வி நிலையிலும் வேறு ஸ்தூலமான அம்சங்களிலும் மக்கள் நிலை அந்நாளில் மாறுபட்டிருந்தது என்பது உண்மைதான். ஆனால் அக உலகில் பிரமாதமான மாறுதல் ஒன்றும் இன்றைய புது நாகரிக யுகத்தில் நிகழ்ந்து விட்டதாகத் தெரியவில்லை. ஆசைக்கு ஓர் அளவில்லை என்று தொடங்கும் தாயுமானவர் பாட்டிலே வருணிக்கப்படும் அக்கால நிலையை ஓர் உதாரண மாகப் பார்ப்போம்.

நில உலகில் ஆட்சி புரியும் அரசர்கள் கடல் மீதிலும் ஆணை செலுத்தக் கருதுவர் என்ற தாயுமானவர் வாக்கு எவ்வளவோ புதுமையாகச் சிலருக்குத் தோன்றும். கடல் மீது 'ஆதிக்கம் கொண்டவர்கள் ஐரோப்பியரே என்று சாதாரண மக்கள் நினைக்கிறார்கள். கடல் கடந்து அக்கரைச் சீமைகளிலும் ஆதிக்கம் செலுத்த முயன்ற அரசர்களைச் சங்க நூல்களும் நமக்கு அறிமுகம் செய்து வைத்திருக்கின்றன.

பல்லவர் காலத்திலும் கடல்மீது அரசர்கள் ஆதிக்கம் செலுத்தியதை வரலாறு அறிவிக்கிறது. எனவே,

"ஆசைக்கோர் அளவில்லை;
அகிலம்எல் லாம்கட்டி
ஆளினும் கடல்மீதிலே
ஆணைசெல வேநினைவர்'

என்ற ஆதிக்க வாதிகளின் மனநிலை தாயுமானவர் காலத்துக்கு முன்னும் காணப்பட்டது, பின்னும் காணப் பட்டதுதான்.

இந்தப் பேராசைக்கு முற்றுப்புள்ளி வைக்க முயலும் பொதுவுடைமைக் கொள்கையையோ சம தர்ம கொள் கையையோ தாயுமானவர் அறியார். எனினும் பேராசையைப்பற்றி அவர் கூறுவது சாராம்சத்தில் முக் காலத்துக்கும் பொருந்துவதுதான். குபேரனுக்கு நிகராகச் செல்வத்தைக் குவிக்கும் முதலாளிகளையும் தாயுமானவர் அறிந்திருக்கிறார்; அந்த வர்க்கத்தை ஒழிக்கும் முயற்சிகளை அவர் அறிந்திருக்கவில்லைதான். எனினும் பேராசை அரக்கனுக்கு ஒரு தலையா, இரண்டு தலைகளா? பத்துத்தலை இராவணன் என்றும் ஆயிரம் தலை சூரபத்மன் என்றும் புராணங்கள், பேராசைக்கு வடிவங்கள் தந்திருக்கின்றன. இப்பேராசை சமதர்மப் பேச்சு நடமாடும் இன்றைய உலகிலும் புதுப்புது வடிவங் கள் எடுக்கக் கூடியதுதானே!

அன்று, இரசவாத வித்தைக்காக அலைந்தவர் களைக் குறிப்பிடுகிறார் தாயுமானவர். இரசவாதம் இரசாயனம் ஆகி விட்டதால், பேராசை மாறிவிட்டது என்று சொல்ல முடியுமா? சிரஞ்சீவியாக வாழக் காய கற்பம் தேடியவர்களைக் குறித்தும் தாயுமானவர் பேசு கிறார். இந்த ஆசை இன்றும் மட்டுப் பட்டதாகத் தோன்றவில்லை.

எவ்வளவு பொருளைக் குவித்தாலும் எத்தனை வசதிகளைத் தேடிக் கொண்டாலும்,

'யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவதும் ஆகமுடியும்?'

என்ற தாயுமானவர் வாக்கு ஒரு நிரந்தர உண்மையைச் சுட்டிக் காட்டுவதுதானே. பசி தீர்ந்தால் உறக்கம்; உறங்கி விழித்தால் பசி—இது கும்பகர்ணனின் நிலை என்கிறது ராமாயணம். அவனுடைய நற்பண்புகள் இல்லாமலே அந்த நிலையைப் பின் பற்றுவோர் தாயு மானவர் கண்ட உலகத்திலும் இருந்தார்கள். இன்று நாம் காணும் உலகத்திலும் இருக்கிறார்கள்.

'இந்த நோய்களுக்கெல்லாம் ஒரு மருந்தாக உள்ளதே போதும்' என்ற காலங்கண்ட மாத்திரையைத்தான் தருகிறார் தாயுமானவர். வைத்தியமும் விஞ்ஞானமும் வெகு அவசரமாக முன்னேறியிருக்கும் இந்நாளிலே இந்தப் பழைய மருந்தோ மூலிகையோ பயன்படுவது எப்படி?

ஆசை வேண்டியதுதான்; ஆசைதானே ஆற்றலைத் தருகிறது. வாய்ப்பையும் தேடித் தருகிறது. ஆசை பேராசையாகவும், வளர்வதில் தவறில்லை. இறைவனுடைய நடனத்தைக் கண்டு களிப்பதில் தமக்குப் பேராசை ஏற்பட்டதாகக் காரைக்காலம்மையார் கூறுகிறார். அந்தப் பேராசை தவறாகுமா? ஆகவே, பேராசையும் வேண்டும்; மன நிறைவாகிய அமைதியும் வேண்டியதுதான். 'ஞானத்தோடு கூடிய அமைதி ஞானத்தோடு கூடிய செயல் திறன்' என்பது சுருக்கமாக இன்றையப் பேரறிஞர் ஒருவர் காட்டும் வழி.

## தாயுமானவர் வழி

தாயுமானவர் இவ்வளவு சுருக்கமாக வழிகாட்டிவிட வில்லை. இவர் வாக்கில் புலப்படும் வாழ்க்கையே நமக்கு இசைந்த ஒரு பெருவழி காட்டக் கூடும். சமய ஞானத் துறையில் வழி காட்டியாக ஒரு குருவும் அவசியமே என்று இக் காலத்திலும், மேலை நாட்டிலும் சில அறிஞர்கள் கருதுகிறார்கள். தாயுமானவர் வாக்கும் வாழ்க்கையும், ஒருங்கே குருவின் அவசியத்தை வற்புறுத்துகின்றன.

குருபக்தி இன்றியமையாதது என்று தாயுமானவர் கூறுவதால் ஞானநெறியில் சீடனுக்குத் தனி வளர்ச்சி என்பதில்லை என்று நாம் முடிவு கட்டுவதற்கில்லை. ஞானகுரு ஒரு வழிகாட்டிதான். உள்ளே இருக்கும் கருணாகரக் கடவுளை இதயகுருவாகக்கொண்டு சீடன் புதிய புதிய உண்மைகளைக் கண்டு பிடிப்பதும் சாத்தியமே.

'பண்ணேன் உனக்கான பூசை ஒரு வடிவிலே
பாவித்து இறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி; அப்
பனிமலர் எடுக்கமனமும் நண்ணேன்'

என்ற தாயுமானவரின் பக்தி அனுபவம் ஒரு புதுமை யானஅனுபவம்தான்.

ஆனந்தக் கூத்தருக்கும் பூசனை புரிய வேண்டும் என்ற எண்ணம் வருகிறது. அதற்கு உரியநேரமும் வந்து விட்டது. நந்தவனத்தில் பூக்கொய்யப் போகிறார். அந்த மலர்களினிடையே அவனே இருப்பது போலவும், அந்தமோன வடிவு ஆனந்த நிருத்த மிடுவது போலவும் தோன்றுகிறது. அந்தத் தரிசனத்திலே மலர் எடுக்க மனம் வரவில்லை என்கிறார். வழக்கம்போல் பூசனை அன்று நடை பெறவில்லை என்று ஊகிப்பதும் தவறா காது. இப்படிப் பல சமயங்களில் நிகழ்ந்திருக்கவும் கூடும். இது பக்தி ஏணியில் ஓர் உன்னதமான படி என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

இதில் மேலும் ஒரு புதுமை. இவர் மலரைப் பறிக்கவு மில்லை; மலரூடு கண்ட கூத்தப் பெருமானுக்குக் கும்பிடு போடவுமில்லையாம். ஏன்? இப்படி எல்லாம் எண்ண மிடும் உள்ளத்தை ஆட்டி வைப்பதும் அவன் தானே. மலரூடு இருப்பவன் தானே உள்ளத்தினூடும் இருக் கிறான். இந்த உள்ளத்திலுள்ள—இறைவனைக் கும்பிட வேண்டாமா?

'நான் கும்பிடும்போது
அரைக்கும் பிடு ஆதலால்
நான்பூசை செய்யல்முறையோ?'

என்று முறையிட்டுக் கொள்கிறார் இறைவனை நோக்கி.

உள்ளும் புறமும் இறைவன் இருக்கும்போது, புறத்தே கும்பிடுவது எப்படி முழுக் கும்பிடு ஆகும்?

எனவே இவர் பூக் கொய்யவில்லை: கை குவித்துக் கும்பிடவும் இல்லை. இப்படி ஒரு மனநிலையையும் தாயுமானவரிடம் காண்கிறோம். இது போன்ற மன நிலைதான் 'அன்பே அபிஷேகம்' என்று கருதி அபிஷே கத்தையும் மறந்திருப்பதும், இத்தகைய பரமஞானி களுக்கு ஒரு காலம் பூசைதான் வேண்டுமா?

'ஒருகாலம் அன்றுஇது,
சதாகால பூசை'

என்கிறார் தாயுமானவர்.

ஞானபக்தி என்றவழி ஒரே நேர்கோட்டில் சென்ற வண்ணமாயிருக்கும் என்பதில்லை. தவறுகள் ஏற்படுவது இயல்பு; ஆனால் தவறை உணர்ந்து திருந்துவது பக்தர் இயல்பு. தாயுமானவரும்,

'யான்எனும் அகந்தைதான்
எள்ளளவும் மாறவிலை'

என்கிறார்; இத்தகைய குறைபாடுகளை அடிக்கடி உணர்ந்து முறையிட்டுக் கொள்கிறார். கடுமையான தற்சோதனைகள் செய்து கொள்வதும் ஞானபக்தர் களின் இயல்புதான்.

இப்படித் தாயுமானவர் வழியைக் குறித்து நெடுகப் பேசிக்கொண்டே போகலாம். சுருங்கச் சொன்னால் இந்த வழியையும் இவர் வாழ்க்கையையும் இவர் கவிதை யாகிய கண்ணாடியில் நீளப்பார்க்கும் பேறு பெறு கின்றோம். இவரது நீண்ட பாடல்களிலும், வாழ்க்கை யின் சாரத்தைப் புலப்படுத்தும் கவித்திறனைக் காண் கிறோம். சில அழகிய வெண்பாக்களிலும் இவர் எழிலையும் வாழ்க்கையின் எழிலையும் ஒருங்கே காண்கிறோம்.

## தாயுமானவர் கவித்திறன்

பராபரக் கண்ணி என்ற தலைப்பிலுள்ள சிலகண்ணி கள் அழகுக் களஞ்சியமாக இருப்பதுடன் சக்திக் களஞ் சியமாகவும் இருக்கின்றன.

'பாராயோ என்னைமுகம்?
பார்த்தொருகால் என்கவலை
தீராயோ? வாய்திறந்து
செப்பாய் பராபரமே'

என்ற பராபரக் கண்ணியை அறியாதார் யார்? எத்தனை தடவை இதை ஓதினாலும், எத்தனை தடவை கேட்டாலும் திருப்தி பிறவாத அமுதமாகத் தித்திக்கிறது இக்கவிதை.

உடம்பு புண்ணை ஆற்ற மருந்து உண்டு; ஆறாத மனப்புண்ணை ஆற்றுவதற்கு மருந்தும் உண்டோ? நெஞ்சைப் புண்ணாகச் செய்து செய்து தம்மைச் சோதித்தது போதாதா, இறைவா—என்று அலறுகிறது இவர் இதயம்.

'எண்ணாத எண்ணம் எல்லாம்
எண்ணி எண்ணி ஏழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப்
போதும் பராபரமே'

என்று தமக்காக மட்டுமா—எவ்வளவோ புண்ணாகி இருக்கும் எத்தனையோ ஏழை நெஞ்சங்களுக்காகவும் இவர் முறையிடுவது போலத் தோன்றுகிறதல்லவா?

'எந் நாட் கண்ணி' என்ற தலைப்பில் இவர் பாடியிருக்கும் கண்ணிகளில் சிலவும், சிறப்பான கவித்திறன் வாய்ந்தவையாகக் காண்கின்றன.

'பாக்கியங்க ளெல்லாம்
பழுத்து மனம்பழுத்தோர்
நோக்கும் திருக்கூத்தை
நோக்குநாள் எந்நாளோ?'

என்ற கண்ணியைத்தான் பாருங்கள்.

'ஆனந்தக் களிப்பு' என்ற பகுதியிலும் வசீகரமான கவிதையைக் காண்கிறோம்.

சோதி மவுனியாய்த்
தோன்றி அவன்
சொல்லாத வார்த்தையைச்
சொன்னான்டி தோழி

என்ற பீடிகையுடன் குருவின் உபதேசத்தை எவ்வளவு வசீகரமாய்க் குறிப்பிடுகிறார்.

அந்தச் சொல்தான் எது? அதை உடனே சொல்லி விடவில்லை.

சொன்னசொல் ஏதென்று
சொல்வேன்? என்னைச்
சூதாய்த் தனிக்கவே
சும்மா இருத்தி
முன்னிலை ஏதுமில்
லாத சுகம்
முற்றச்செய் தேஎனைப்
பற்றிக் கொண்டான்டி

என்பது தோற்றுவாய் தான்.

இப்படியே நம் ஆவலைத் தூண்டிக் கொண்டே போகிறார் அப்பால்.

அருளால் எவையும்பார்
என்றான் அத்தை
அறியாதே சுட்டிஎன்
அறிவாலே பார்த்தேன்.

என்று, உபதேசம் கேட்ட பின்பும் தமக்கு ஏற்பட்ட தடுமாற்றத்தைக் குறிப்பிடுகிறார். அருள் என்ற கண்ணை இசைத்துக் கொண்டு பாராமல்செய்தி அறிவையோ நிகழ்ச்சி அறிவையோ மட்டும் நம்பிப் பார்ப்பவர்கள் இருளான பொருள் கண்டதல்லால் மெய்ப் பொருள் காண்பதில்லை என்கிறார்.

தாயுமானவரின் உள்ளொளியைத் தூண்டிவிட்ட குரு பக்தியும் உபதேசமும், உள்ளொளியைப் புலப்படுத்தும் கவித்திறனையும் அதிகரிக்கச் செய்துள்ளன என்பது "ஆனந்தக் களிப்'பிலிருந்தே இனிது புலனாகும். உண்மை குரு நீளமாக உபதேசிக்க வேண்டியதில்லை.

சொன்னது மோஒரு
சொல்லே.

என்கிறார். 'அந்தச் சொல்லால் விளைந்த சுகத்தை என் சொல்வேன்' என்ற வினாவில், குருவின் உபதேச மொழி இதயத்தைத் தொட்டுத் தமக்கு ஆழ்ந்த ஆன்ம சுகத்தை அளித்தது என்பதும், அந்தச் சுகம் சொல்லால் சொல்லும் தரம் அன்று என்பதும் குறிக்கப்படுகின்றது. கவிதையிலும் கூட அது பேசாத பேச்சாகத்தான் புலனாகும் என்பதும் குறிப்பு.

அநுபூதிக் கலையின் ஒரு சிகரத்திலே நின்று தாயுமானவரின் கவிதை ஊடுருவிப் பார்த்து, கண்ட உண்மையைத்தான் ஆனந்தக் களிப்பு.

சங்கர சங்கர சம்பு—சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு

என்று கும்மாளம் போட்டு நமக்கும் ஒருவாறு உணர்த்தப் பார்க்கிறது.

இந்த நிலையில் வேதாந்த சித்தாந்த விவகாரங்களுக்குத் தான் இடமேது? அத்வைதம், துவைதம் என்ற கொள்கைகளுக்குத்தான் இடமெங்கே?

ஆங்கென்றும் ஈங்கென்றும்
உண்டோ?

என்றும்,

ஒன்றென்று இரண்டென்று
உரைத்திட லாமோ?

என்றும்,

அன்றென்றும் ஆமென்றும்
உண்டோ?

என்றும் வினாக்களிலேயே இவர் விடையிருப்பதைப் பாருங்கள்.

தாயுமானவரின் அநுபூதிக்கலை ஆத்திக நாத்திக விவகாரங்களுக்கும் அப்பாற்பட்டது. இதை அனுபவித்துத் தான் உணர முடியும். எனினும் இவரது வாழ்க்கையில் பூத்த வாக்கிலே, நாமும் இவரது தம்பியும் மாணாக்கருமான அருளையரைப் போல் ஒருவாறு இவரது ஞானானந்த சொரூபத்தைக் கண்டு கொள்ளலாம்.

அருள்உனக்கு உண்டேல்
அருளும் வெளிப்படும்.

என்று அருளையரின் துதியாகிய "அருள்வாக்கிய அகவல்" நமக்கு உறுதி கூறுகிறது.

# 4. கபீர்தாசர்

## வரலாறும்—வாழ்க்கையும்

தாயுமானவரைப் போல் வடநாட்டுக் கபீர்தாசரும் இந்திய சமய வரலாற்றில் மிக உயர்ந்த இடம் ஒன்றை வகிக்கிறார். இவருடைய குணாதிசயமும் தாயுமான வரின் குணச்சித்திரம் போல் தூய அழகு வாய்ந்தது. இவரது இலக்கியத் தொண்டும் தாயுமானவரின் அரும் பெருந்தமிழ்த் தொண்டிற்குக் குறைந்ததன்று.

வேதாந்த சித்தாந்த சமரச ஞானி தாயுமானவர் என்றால், இந்து மதத்திற்கும் இஸ்லாம் மதத்திற்கும் அடிப் படையில் வேற்றுமை கிடையாது என்று துணிந்து முடிவு கட்டிய சமரச மாவீரர் கபீர்தாசர். தாம் கண்ட சமரச உண்மையையும் வேறு அநுபூதி உண்மைகளையும் தமது கவித்திறனால் உணர்த்தியது தாயுமானவரின் தனிச்சிறப்பு மட்டுமன்று; கபீர்தாசரின் தனிச்சிறப்பும் கூட. இத்தகைய தனிச் சிறப்பு வாய்ந்த பக்த கவிகளை அபூர்வமாகத்தான் காண்கிறோம்.

தாயுமானவரின் அநுபூதிக் கவிதை அழகைத் தமிழ் வாசகர்கள் மூலக் கவிதையிலேயே நேரடியாக அனுப விக்க முடியும்; ஆனால், கபீர்தாசரின் கவிதை அழகை மொழி பெயர்ப்பில் தான் தமிழ் ஒன்றே வல்லவர்கள் ஓரளவு கண்டு களிக்க முடியும். எத்தகைய எளிய இனிய தமிழில் மொழி பெயர்த்துப் பார்த்தாலும் மூலக் கவிதை யின் முழுச் சுவையையும் எப்படித்தான் பார்க்க முடியும்? தாயுமானவரின் முழுக் கவிதை அழகையும், உணர்ந்து கொள்ள முயலும் தமிழறியாத வடநாட்

டாரின் நிலைமையையும் இப்படித்தான் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

## இந்தி மொழியின் ஆதிகவி

ஆயிரக்கணக்கான கவிகளை இந்திக்கு அளித்து அதைக் கிராமிய மொழியான நிலையிலிருந்து இலக்கியத் தரம் வாய்ந்த மொழியாக்கியவர் கபீர்தாசரே என்பர். கபீரை நிகரற்ற புரட்சி வீரர் என்று கருதுவதும் பொருத்தமே. சமூகத்திலும் சமய வாழ்க்கையிலும் காணப்பட்ட குறைபாடுகளை,

புண்வைத்து மூடார்
பொதிந்து

என்ற மனப்பான்மையுடன், கண்டு காட்டி அவற்றுக்குரியது இரணசிகிச்சை தான் என்பதை உய்த்துணர வைத்தவர் கபீர். தாயுமானவரிடத்திலும் நாம் காண இயலாத ஒரு புரட்சிகரயான புதுமைச் சிறப்பு இது.

இந்தக் கவிஞர் தமது ஞானச் சிறப்பிலும், அநுபூதிச் சிறப்பிலும் தாயுமானவரை நினைவூட்டிய போதிலும், இவரது புரட்சி வீரம் புத்தர் பெருமானையே நினைவூட்டுகிறது. கவிஞராக அறவழியும், அறிவு வழியும் ஒருங்கே காட்டிய திருவள்ளுவரை நினைவூட்டுகிறது இந்த இந்திக் கவிஞரின் அனுபவ அறிவு. ஆம் நினைவூட்டுவது தான். மற்றைப்படி புத்தருக்கும் வள்ளுவருக்கும் நிகராவார் யாரே?

வாசுகி என்ற தன் வாழ்க்கைத் துணைவி நூற்ற நூலைக்கொண்டு திருவள்ளுவர் நெசவுத்தொழில் செய்து பிழைக்கும் வழி தேடிக்கொண்டதாகக் கதை வழங்குகிறது. கபீர்தாசரின் நெசவுத் தொழில் இவ்வள்ளுவர் கதையையும் நினைவூட்டுகிறது. தொழிலில் ஈடுபட்ட வண்ணம் தம் திருக்குறள் என்ற நூலையும் நூற்றார் திருவள்ளுவர் என்று கருதுவோர் உண்டு. ஆனால் இது கபீரைப் பற்றிய முழு உண்மையுமாகும்.

## கபீர் வாழ்ந்த காலம்

கி.பி. 15-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் கபீர். தாயுமானவருக்கு ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கு முன் இருந்தவர். கபீர் காலத்தில் வட இந்தியாவின் நிலைமை என்ன? இந்திய சரித்திரத்திலே கி.பி. ஏழாம் நூற்றாண்டு ஒரு பெரிய மைல் கல்லாக மதிக்கத்தக்கது. திருஞான சம்பந்தரும், அப்பர் சுவாமிகளும், தென்னகத்தில் வாழ்ந்த காலம் அது சங்கரர் வாழ்ந்தது பக்தி யுகத்தின் இடைக்காலமாகிய எட்டாம் நூற்றாண்டு. இவர் தென்னகத்தில் பிறந்தவராயினும் காஷ்மீரம் வரையில் வடநாட்டிலே இந்துசமய மறுமலர்ச்சித் தொண்டைச் சிறப்பாக செய்திருக்கிறார்.

தமிழ்நாட்டுப் பக்தமணிகளும் சங்கரரும் தோன்றுவதற்கு முன்பே புத்தரும் மகாவீரரும் சமயத்துறையிலும் சமுதாயத்துறையிலும் புரட்சிகரமான மாறுதல்களைச் செய்ய முயன்றிருக்கிறார்கள். அதனால் கொந்தளிப்பு ஏற்பட்டது; குழப்பமும் தோன்றியது. புத்தராலும், மகாவீரராலும் இந்தியர்களைப் புத்த மதத்திலோ, சமண மதத்திலோ கொண்டுபோய் சேர்த்துவிட இயலவில்லை. அம்மதங்களின் சிறந்த அம்சங்களைமட்டும் சொந்தமாக்கிக்கொண்டு இந்துமதம் தொன்றுதொட்டு வந்திருக்கும் வேத நெறியிலே வேரூன்றி மும்முரமாக வளரத் தொடங்கிவிட்டது.

இந்த வளர்ச்சிக்குச் சங்கரர் அகில இந்தியப் பொது நோக்குடன் உதவினார்; தமிழகத்துப் பக்த மணிகளோ இந்துசமய மறுமலர்ச்சிக்கு உரிய தொண்டுகளைத் தமிழ் நாட்டிலேயே செய்து வந்தனர். அத்தொண்டுகளின் பயனாகப் புறத்திலிருந்து வந்த அம்சங்களைக் கடலில் கலப்பதுபோல் இந்து வைதிக சமயத்தில் கலந்து கரைந்து விட்டன. ஆனால் அதே காலத்தில் அரேபியாவில் இஸ்லாம் உதித்தது; இப்புதிய மதம் ஸிந்து நதிக்கரையிலும் வந்து மோதப்போகிறது என்பதை நமது பக்த மணிகளும் அறியார்; சங்கரரும் அறியார்.

இஸ்லாம் உதயமான சில நூற்றாண்டுகளில் அது மேலும் மேலும் முன்னேறியது. இந்த மோதல்களைப் பௌத்த சமணங்களான அஹிம்ஸா தர்ம மதங்களைப் போல் இந்தியர்களால் சமாளித்துக்கொள்ள முடிய வில்லை. பதினோராவது நூற்றாண்டில் ஏற்பட்ட முஸ்லிம் தாக்குதல்களை எதிர்த்துச் சமாளித்துக் கொள் ளும் ஆற்றலையோ ஒருமை உணர்வையோ இந்து சமு தாயம் பெற்றிருக்கவில்லை.

பதினோராவது நூற்றாண்டிலும் 12-ஆம் நூற்றாண் டுத் தொடக்கத்திலும் வாழ்ந்தவர் இராமாநுஜர்; இவ ரது பக்தி மதமும் சிறப்பாக அகிம்ஸா தர்மக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டதுதான். மேலும், முஸ்லிம் தாக்குதல்களால் தமிழ்நாடு அந்தக் காலத்திலே பாதிக்கப்படவில்லை. முகம்மதிய மதத்தில் பிறப்பால் உயர்வு தாழ்வு இல்லை; இக்கொள்கை இராமாநுஜரின் ஸ்ரீவைஷ்ணவத்திலும் இடம் பெற லாயிற்று. இந்தப் பக்தி மதம் இராமானந்தரால் சில மாறுதல்களுடன் வடநாட்டிலும் பரவத் தொடங்கியது, 15-ஆவது நூற்றாண்டிலே.

இக்காலத்தில் ஒரு விளக்கில் கொளுத்திய பல விளக்குகளைப்போல் காசியில் இராமானந்தர் பக்திப் பிரசாரம் செய்தகாலத்திலே ஜயதேவரும் சைதன் யரும் வங்கநாட்டில் தோன்றினர். இராஜபுதனத்தில் ஆண்டாளை ஒத்த பக்திச் சுடர்க்கொடியான மீராபாய் தோன்றினாள். கூர்ச்சரத்திலே மகாத்துமா காந்திக்கு உகப்பான வைஷ்ணவ லட்சணம் குறித்துப் பாடியிருக் கும் நரசிம்மமேதா தோன்றித் திகழ்ந்தார். பாஞ்சாலத் திலே குருநானக் சீக்கிய மதத்தை நிறுவினார்.

இத்தகைய மகான்கள் தோன்றுவதற்கு இராமா நுஜர் வளர்த்த பக்திமதம் மூலகாரணமாயிற்று எனலாம். இவர் வழி வந்த இராமானந்தரே அந்த பக்தி மதத்தின் விதையை வடநாட்டில் விதைத்தவராவர். இவர்

கி.பி. 1400 முதல் 1470 வரையில் காசியில் வாழ்ந்தவர். இராம பக்தியை மிகவும் எளிய உபாயமாக வற்புறுத்தியவர் இராமானந்தரே.

காசியிலும் சுற்றுப்புறங்களிலும் இராமானந்தரின் புகழ் பரவியது. சாதுக்களின் கூட்டம் பஜனைகளிலும் இராமநாம முழக்கங்களிலும் ஈடுபட்டது. அறிவாளிகளான முஸ்லிம் சிந்தனையாளர்களும். இராமானந்தரின் அறிவொழுக்கங்களையும் பக்திக் காதலையும் கண்டு வியந்தனர் என்று கருதலாம். வைணவர்களின் பக்தியனுபவங்களையும் பக்திக் காதலையும் பல அம்சங்களில் ஒத்திருக்கும் **ஸுபி இயக்கம்** முஸ்லிம்களிடையே வேரூன்றி வளர்ந்ததும் இக்காலத்திலே தான்.

ஸுபிகளின் இயக்கத்தில் ஒருவகை யோக முறைக்கும் இடமுண்டு; நாயக-நாயகி முறையில் ஆழ்வாராதியர்களைப் போல் ஆண்டவனைத் தொழுவதற்கும் இடமுண்டு. ஸுபிகள் சமயச் சடங்குகளை அவசியமானவை என்று கருதுபவர் அல்லர்; அகத்தூய்மையையே முக்கியமாக மதிப்பவர். இவர்கள் மந்திர ஜபத்திலும் நம்பிக்கையுள்ளவர்கள். குரு மூலமாக உபதேசம் பெறுவதையும் நம்பி ஒழுகுபவர். பக்திப் பரவசத்தால் ஆண்டவனோடு இரண்டறக் கலத்தல் என்ற குறிக்கோளையும் உடையவர்கள்.

தமிழகத்தில் ஆழ்வார்களும் சிவநேசர்களும் தோற்றுவித்த பக்தி மதம் ஸுபி இயக்கத்திற்கும் காரணமாக இருந்திருக்கலாமோ என்னமோ? இதுஆராய்ச்சிக்குரியது. இதை எப்படி முடிவுகட்டினாலும், பக்தி இயக்கத்திற்கும் ஸுபி இயக்கத்திற்கும் உள்ள ஒற்றுமைகளை நாம் மறப்பதற்கில்லை. இந்து பக்தர்களுக்கும் ஸுபிகளுக்குமிடையே வேற்றுமைகளும் உண்டு. ஆனால், காசியிலும் சுற்றுப்புறங்களிலும் உள்ள இந்துக்களும் முஸ்லிம்களுமாகிய பொது மக்கள், இராமானந்தரின் பக்திமதக் கொள்கைகளை ஸுபி இயக்கத்தின் கொள்கைகளோடு ஒப்பிட்டு ஒற்றுமை கண்டனர் என்லாம்.

இத்தகைய சூழ்நிலையில் கபீர்தாசர் என்ற அற்புத மகான் தோன்றி வளர்ந்தார். இந்து-முஸ்லிம் சமூகங்களுக்கிடையே ஒரு பொற்காலம்போல் அமைந்தவர் இவர். இவரது முயற்சி அதாவது இரண்டு முரண்பட்ட சமயங்களையும் ஒன்றுபடுத்தும் முயற்சி பலித்ததா? வெற்றி யடைந்ததா? இக் கேள்வி முக்கியமானதன்று. இத்தகைய முயற்சிகளுக்குத் தோல்வியே கிடையாது. 500 ஆண்டுகளுக்குப்பின் கபீரின் தைரிய சாகச முயற்சியைப் போற்றுகிறோமல்லவா? எதிர்காலத்தில் இரு பெருஞ் சமயங்களும் கபீர்தாசரின் இணைப்புக் கொள்கையை ஆதாரமாகக் கொண்டு சமரசம் காண முயல்வதும் அசாத்தியமன்று.

### கபீரின் வாழ்க்கைக் கதையும்—கற்பனைகளும்

கபீரின் வாழ்க்கை ஓர் அதிசயமான கதை. ஆனால் உண்மைக் கதை. இந்தக் கதையைச் சுற்றி எத்தனையோ கற்பனைகள் முளைத்துப் படர்ந்திருக்கின்றன. பக்த விஜயம் என்ற வசனநூல் ஒன்று இன்றளவும் தமிழ் நாட்டிலே வாசிக்கப்படுகிறது. கதாகாலட்சேபமாகவும் நடைபெறுகிறது கபீர்தாசர் கதை. இவர் பிறப்பைக் குறித்தும், இளம் பிராயம் குறித்தும் உபதேசம் பெற்ற உபாயம் குறித்தும் மகப்பேறு, மரணம் முதலான செய்திகள் குறித்தும் கதைகள் நமது நாட்டிலும் உலாவுகின்றன.

இந்துக்கள் இவர் வாழ்க்கையைப்பற்றிக் கற்பனைகள் செய்திருப்பது போல், 'கபீர் பந்த்' என்று சொல்லப்படும் கபீர் மரபினரும் கற்பனைகள் செய்திருக்கிறார்கள். காசி வாசியான நீரு என்ற முஸ்லிம் கைக்கோளன் (நெசவாளி) நீமா என்னும் பெண்ணை அழைத்து வருகையில் அவள் குளத்திலிருந்த தாமரைப்பூவில் ஒரு குழந்தையைக் கண்ணுற்றாள் என்றும் அதுதான் கபீராக வளர்ந்தது என்றும் கபீர் பந்திகள் கூறுகிறார்கள். குழந்தை கபீர் உணவு புசியாமலே வளர்ந்து வந்தார் என்றும், பிறகு பால்மட்டும் பருகி வளர்ந்தார்

என்றும் கூறுவதுண்டு. இவை போன்ற கற்பனைகளை வேறு பக்தர்களின் கதைகளிலும் கேட்கிறோம். கபீர் தாசர் இராமானந்தரிடம் உபதேசம் பெறுவதற்காகக் கையாண்ட உபதேசமும் ஒரு கற்பனை என்றே தோன்றுகிறது.

இக் கற்பனைகளில் சில பகுத்தறிவுக்குப் பொருத்தமாகவும் இருக்கின்றன. உதாரணமாக இராமானந்தரின் குருவின் சிரார்த்தனைதினத்தில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் ஒரு செய்தியைக் குறிப்பிடலாம். சீடர்கள் அன்று பால் கொண்டு வரப் புறப்பட்டுப் பசுக்களைத் தேடித் திரிந்தனர். கபீர் மட்டும் செத்துப்போன பசுக்களின் எலும்புக் குவியல் கிடந்த இடத்திற்கு அருகே நின்று கொண்டிருந்தாராம். என்னப்பா செய்தி? என்று குரு கேட்டார். அதற்குக் கபீர் உம்முடைய செத்துப் போன தந்தைக்கு செத்த மாட்டின் பாலே பொருத்தமானது என்று பதில் சொன்னாராம். அற்புதமான பகுத்தறிவு—வாதம்; ஆனால் கற்பனை கற்பனைதானே.

கபீரின் பாடல்களை வைத்துக்கொண்டு கதைகட்டியிருக்கிறார்கள். ஆனால் கபீரின் வாக்கிலிருந்து உண்மையான வாழ்க்கைக் கதையை ஊகித்து உணர்ந்து கொள்வதில் தவறு ஒன்றுமில்லை.

இதற்கும் ஒரு உதாரணம் காட்டலாம். ஆசாரம் கொண்டாடும் ஒரு பண்டிதருக்குப் புத்திமதி கூறுகிறது ஒரு பாட்டு, அதன் தமிழாக்கம் வருமாறு:

பண்டிதரே! நீர் தண்ணீர் அருந்தும்போது
    நினைத்துப் பாரும்;
நீர்வசிக்கும் மண்குடிசையில் உலகமே அடங்கி
    உள்ளது.

..................................................

அடிக்கு ஒரு பெரியோர் புதையுண்டு மண்ணொடு
    ஒன்றிப் போயினர்.

மீனும் ஆமையும் முதலையும் பிறந்து இறப்பதால்
நீரெல்லாம் இரத்தம் தோய்ந்தது
ஆற்றுவெள்ளம் வாய்க்கால்களில் பாய்கிறது;
மக்களும் மாக்களும் அதில்கரைந்திருக்கின்றனர்.
எலும்பு கரைந்து கொழுப்பு உருகாமல்
உமக்கு எங்கிருந்து கிடைக்கிறது பால்?
ஓ பண்டிதரே நீர் மண்ணில் அமர்ந்தே தண்ணீர் பருகினீர்
மண்பாண்டம் அசுத்தமாகிவிட்டது என்கிறீர்.

இந்தப் பாட்டிலிருந்து புற ஆசாரங்களை அகத்தின் அன்பிற்கே முதலிடம் கொடுக்கும் கபீர் சிறிதும் மதிக்கவில்லை என்பது தெளிவு. வைதிக பண்டிதர்கள் சிலர் ஆசார சீலர்கள் போல் வேடம் போடுவதையும், பலர் அந்த ஆசாரங்களையே மதக்கொள்கையாக மதித்து நடப்பதையும் கபீர் பல இடங்களிலும் பார்த்திருக்கக் கூடும். ஆனால் இதற்கு மேலே வளர்ந்திருக்கிறது கதை.

ஒரு பெண்ணின் ஜாதியை அறிந்து கொள்ளாமல் பிராமணன் ஒருவன் தாகத்தால் தவித்து அவளிடம் தண்ணீர்பெற்றுப் பருகினானாம். அவள். முஸ்லிம் பெண் என்று தெரிய வந்ததும் ஐயோ, சாதிக் கெட்டுப் போச்சே! என்று அலறினானாம். அப்பார்ப்பனனுக்குப் புத்தி புகட்டவே மேலே சொன்ன கவிதை பிறந்தது என்று ஒரு கற்பனை செய்திருக்கிறார்கள். இக்கவிதையைக் கேட்டதும் அந்தப் பார்ப்பான் கபீர் அடிகளில் வணங்கி இவருக்குச் சீடனாகிவிட்டானாம். கற்பனை இன்னும் வளருகிறது; கபீர் சீடனுக்கு அந்த முஸ்லிம் பெண்ணை மணஞ் செய்வித்து மகிழ்ந்தாராம்.

'நீ வானளவும் மாளிகை யமைத்துச் சிறப்பிக்கப் பிறரையும் அழைத்தாய்.........ஆனால் இமைப்பொழுதில் நீ அதை விட்டு விலகுவாயே' என்று செல்வத்தின் நிலையாமை குறித்து ஒரு கபீர் பாட்டு உண்டு. இது

சாதாரண நிலையாமைப்பாட்டே; நமது நாட்டு மகான்கள் பலர் வாக்கிலும்இக்கருத்து வெளியிடப்பட்டுள்ளது.

நிலையாமை சால
நிலைபெற்றதன்றே

அதாவது நிலையாமை ஒன்றே இவ்வுலகில் நிலைபெற்று நிற்பது என்று சமணகவி ஒருவர் கூறுகிறார்.

இந்தப் பாட்டை ஆதாரமாகக் கொண்டு ஒரு கதை படர்ந்திருக்கிறது. வீரசிங்கன் என்ற அரசன் ஒருவன் ஓர் அழகிய அரண்மனை அமைத்துத் திறப்பு விழாவிற்கு கபீரையும் அழைத்திருந்தானாம். அந்த அரசனும் இவர் சீடர்களில் ஒருவன். தன்னைப் புகழ்ந்து கொண்டிருந்த முகஸ்துதிக்காரர் பலரிடையே அவன் கபீரைத் தெரிந்து கொள்ளவில்லை. மாளிகையில் குறைகள் இருப்பதாய்க் கபீர் கூறிய பின்புதான் இவர் யார் என்று விசாரித்து ஞாபகப்படுத்திக் கொண்டானாம்.

பெருமைக்கு வழி ஒன்றே; மற்றவை எல்லாம் துறந்து ராமன் புகழையே பாடவேண்டும் என்றும், எல்லாம் ஒன்றென்று நான் உணர்ந்திருந்தால் பிறருக்கு என்ன? என்றும் முகமதிய அரசனான சிக் கந்தர் லோடியிடம் கபீர் கூறினார் என்று இப்பாட்டையே ஆதாரமாகக் காட்டுகிறவர்கள் உண்டு. இந்து பண்டிதர்களும் முகம்மதிய காஜிகளும் இவர் மேல் உள்ள விரோதத்தால் தங்களுக்குள்ள பரஸ்பர விரோதத்தை ஒரு சமயம் சிறிது மறந்து சிக்கந்தர் லோடியிடம் இவரைப் பற்றி புகார் செய்த போது அரசனுக்கும் அவர்களுக்கும் இந்த ஒரே பாட்டில் விடையிறுத்தார் என்பது கதை. இப்பாட்டு.

ஓ சிக்கந்தர்! நான் இரு மதங்களுக்கும்
பொதுவான குரு.

என்று முடிவுறுகின்றது.

இப்படியே பல பாடல்களிலிருந்து பல கதைகள் முளைத்திருக்கின்றன.

உன்பாதையில் முள்விதைப்பவனுக்கு
நீ பூவை விதை;

உனக்கு முள் பூவாகும். அவனுக்குப் பூ சூலமாகும் என்ற பாட்டிலிருந்துகூட ஒரு வாழ்க்கைக் கதையை முளைக்கச் செய்திருக்கிறார்கள். இப்படிப் பலவிதமாக வழங்கும் கதைகள் காற்றுக்குள்ளே புகுந்து அங்கும் ஒரு நெறி கண்டு கபீரின் உண்மையான வாழ்க்கைக் கதையைக் கண்டு பிடிக்க முயலலாம்.

## உண்மையான வாழ்க்கைக் கதை

கபீர் முகமதியர் வீட்டில் வளர்ந்தார் என்பதும், காசியில் வாழ்ந்தார் என்பதும், இராமானந்தரின் சீடர் என்பதும் நிச்சயமான அடிப்படைச் செய்திகள். இவர் முகமதியப் பெற்றோருக்குப் பிறந்தவர் என்பதையும் நிச்சயமான செய்தியாகக் கொள்ளலாம். இவர் யோகி என்ற பெண்ணை வாழ்க்கைத் துணையாகக் கொண்டிருந்தார். இந்த மணச் செய்திபோல் மக்ஹறில் காலமானார் என்ற மரணச் செய்தியும் அனைவரும் ஒப்புக் கொள்ளும் அடிப்படைச் செய்திகளே.

இவர் வாழ்க்கைக்குத் தெய்வ மணம் ஊட்டவும், இதில் அற்புத மணம் கமழச் செய்யவும் சீட பரம்பரையினர் கதைகள் புனைந்திருக்கின்றனர். பொது மக்களின் மனோபாவமும் கதைத்தறியில் இவர் வாழ்க்கையை நெசவு செய்து பார்த்திருக்கிறது. இவர் கவிதைகளிலிருந்தும் கதைகள் முளைத்துப் படர்ந்திருக்கின்றன என்பதை ஏற்கெனவே கண்டோம். நூல்களில் சொருகு கவிகளைக் காண்பதுபோல் இவரது வாழ்க்கை வரலாற்றில் சொருகு கதைகளைக் காண்கிறோம். இவற்றோடு

கதா காலட்சேபம் செய்வோரும் கயிறு திரித்து விட்டிருக்கிறார்கள்.

இவற்றினூடே, கபீர் பிறந்த ஆண்டையும் இறந்த ஆண்டையும் கணிப்பதுகூடச் சிரமமான காரியம்தான். கபீர் பந்த் என்ற கபீர் மரபினர் இம்மகான் கி.பி. 1398இல் பிறந்து 1518 வரையில் வாழ்ந்தார் என்று கூறுகிறார்கள். இது உண்மையானால் கபீரும் இராமாநுஜரைப்போல் 120ஆண்டுகள் வாழ்ந்திருக்க வேண்டும். இராமாநுஜரைப் பற்றிக் கேள்விப்பட்ட கபீர்-பந்தினர் தங்கள் குருநாதரும் இராமாநுஜரைப்போல் வாழ்ந்தார் என்று சொல்லிக் கொள்வதில் பெருமை கண்டனர் போலும். இராமானந்தர் வாயிலாக இராமாநுஜரின் வாழ்க்கைக் கதை வட இந்தியாவில் பரவியிருந்தது என்று கருதுவது பொருத்தமே.

இராமானந்தர் 1400ல் பிறந்தார் என்பது நிச்சயமான செய்தியாகக் கருதப்படுகிறது. முப்பதாவது வயதில் சமயப்பிரசாரம் செய்யத் தொடங்கினார் என்றும், 40 ஆண்டுகளாக அதாவது எழுபதாம் வயதுவரை பிரசாரம் செய்து கொண்டிருந்தார் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். இதற்குப் பொருத்தமான முறையில் கபீர்தாசரின் வாழ்க்கையைப் பொருத்திப் பார்ப்பதே முறை.

கபீர்தாசர் 78 வயது வரை வாழ்ந்தார் என்பதை ஒரு நம்பத்தக்க செய்தி என்பர். கபீர் பந்தினர் கபீரின் மரண காலமாகக் குறிப்பிடும் கி.பி. 1518-ம் ஆண்டையும் ஒப்புக் கொண்டால் இவர் பிறந்தது 1440ல் என்று ஏற்படுகிறது. கபீர் பிறக்கும்போது இராமானந்தருக்கு வயது 40 ஆகும் இக்கணக்கின்படி. கபீர் பிஞ்சிலே பழுத்து பழமாக இளம் பிராயத்திலேயே ஞான குருவை நாடினார் என்ற செவிவழிச் செய்தியும் நம்பிக்கைக்கு உரியதே. இந்த நிலையில், கபீர் தமது 15ஆம் வயதில், அதாவது கி. பி. 1455ல் இராமானந்தரைக் குருவாகக்

கொண்டார் என்று **கபீர்தாசர் (சரிதையும்—கவிதையும்)** என்ற தமிழ் நூலில் ஆசிரியர் கோ. கிருஷ்ணமூர்த்தி கூறுவதை நானும் ஒப்புக் கொள்ளுகிறேன். அப்படி யானால் இராமானந்தருக்கு கபீர் சீடராகக் கிடைத்த போது 55 வயது ஆகியிருக்கும்.

சிக்கந்தர் லோடி என்ற முகம்மதிய அரசன் கி. பி. 1488 முதல் 1512 வரை ஆட்சி புரிந்ததாக இந்திய தேச வரலாறு தெரிவிக்கிறது. இந்த அரசனும் கபீர் காலத்தில் வாழ்ந்தவனே என்பதை ஏற்கெனவே தெரிந்து கொண்டிருக்கிறோம். குருநானக் என்னும் **சீக்கிய** முதல் குரு கி.பி. 1469 முதல் 1538 வரை வாழ்ந்தவர் என்று தெரிய வருகிறது. இவர் கபீரைவிட வயதில் இளையவர். இராமானந்தரை குருநானக் நேரில் சந்திக்கவில்லை என்பது திண்ணம். ஆனால், அவர் கொள்கைகளை உருவாக்க இராமானந்தர் உபதேசங்களும், கபீரின் கவிதைகளும் கொள்கைகளும் உதவியிருக்க வேண்டும் என்பது உறுதி.

இராமானந்தரைக் கபீர் குருவாகக் கொண்டதற்குக் கையாண்ட தந்திரம் பற்றிய செய்தியை நம்புவதற்கில்லை. இராமானந்தர் சாதி வேற்றுமைகளைப் பாராமல் இழிந்த வகுப்பினராகக் கருதப்பட்டவர்களையும் சீடர்களாக்கிக் கொண்டதால், கபீரை ஏற்றுக் கொள்ள மறுத்திருப்பார் என்று எண்ண முடியாது. ஆகவே அதை ஒரு சுவையான கதைத் துணுக்காகத்தான் கருதலாம்.

கபீர்தாசர் இராமானந்தரைப் போலவோ, அவரது மற்றைச் சீடர்களைப் போலவோ, விரதங்களையும் விக்கிரக வழிபாட்டையும் தீர்த்த யாத்திரைகளையும் ஒப்புக் கொள்ளவில்லை. இதுவும் அவரது முஸ்லிம் பிறப்புக்கும் வளர்ப்புக்கும் பழக்க வழக்கங்களுக்கும் ஒரு சான்றாகக் கருதத் தக்கது. நெசவுத் தொழில் செய்தார்

என்பதற்குக் கவிதைகளிலும் அகச்சான்று கிடைத்திருக்கிறது. படைப்பையே கடவுளின் நெசவாக இவர் உருவகப் படுத்திப் பாடியுள்ளார்.

ஹரிநாமத்தை நெய்வாய்! என்பது ஒரு பாட்டின் உபதேசம்.

அவன் பாவு போட்டுப் பாயை எடுத்தான்;
நாலு வேதங்களும் ஊடுகள்!
ஒரு விட்டம் சங்கல்பித்ததை நிறைவேற்றும்
ராம நாராயணன்—
அவன் கடலைத் தொட்டியாக்கினான்; அதில்
கஞ்சியைக் கலக்கினான்!
சூரியனும் சந்திரனும் ஓடும் குழாய்கள்!
கடல் நடுவில் கஞ்சி தோய்க்கப்பட்டது
மூன்றுலகின் நாதன் கஞ்சியைத் தோய்க்கவும்
சியாம கிருஷ்ணன் அறுந்த நூல்களை
நாவில் தொட்டு இணைத்தான்!
அவன் முளைகளையடித்தான் ஊடு கொண்டு
நெய்யத் தொடங்கவும் ராமன் கட்டுண்டான்!
நெய்ய நெய்ய, மூன்று லோகங்களும் பிணிப்
புண்டன, தப்பினார் ஒருவருமில்லை
மூன்று லோகமும் ஒரு தறியாயிற்று, ஊடு நூல்
மேலும் கீழும் ஓடிச்சென்று வந்தது.

இந்த நெசவுப் பாட்டிலேயே, இராமானந்தரின் வைணவக் கொள்கைகளை அப்படியே ஒப்புக்கொள்ளாவிட்டாலும் கபீரின் உள்ளம் அவற்றின் சாரத்தை உறிஞ்சிக் கொண்டது என்பதற்குச் சான்று காணலாம். நெசவுக்குக் கையும் கடவுளுக்கு இதயமுமாக வாழ்ந்த கபீர், முழத்தாடியும் கஜநீளச் சடையுமாய் காவி ஆடை பூண்டு மத வாழ்க்கையைப் பிழைப்புக்கு உரிய ஒரு தொழிலாகக் கொண்டு திரிந்த சோம்பேறிச் சாமியார்களை வெறுத்து வந்தார். உண்மைத் துறவிகளிடம்

மதிப்புள்ளவரே; எனினும் இல்லறத்தில் உள்ளத்துறவு பூண்டு வாழ்வதே சிறந்த வாழ்வு எனக் கருதினார்.

இந்து சமயத்தையும் முஸ்லிம் சமயத்தையும் இணைக்க முயன்ற இவருக்கு இந்த இரண்டு மதத்தினர் களிலும் விரோதிகள் காணப்பட்டார்கள். இரு மதங் களிலுள்ள போலிக் கொள்கைகளையும் மூடப் பழக்க வழக்கங்களையும் எதிர்த்ததுதான் இதற்குக் காரணம். ஆனால், இரு மதங்களின் சாரமான உண்மைகளை இவர் ஏற்றுக்கொண்டு ஒரு பொற்பாலமாக விளங்கியது. அந்நாளிலும் சில முஸ்லிம் சிந்தனையாளர்களுக்கும் இந்து சிந்தனையாளர்களுக்கும் உகப்பாகவே இருந் திருக்கவேண்டும். தவிர பொது மக்களின் உள்ளத்தில் இவர் செல்வாக்கு அன்றும் மிகுந்திருந்தது எனலாம்.

இவர் காசியை விட்டு மரணத்தறுவாயில் மக்ஹரை அடைந்ததற்குக் காரணம் அச்சம் அன்று என்பதற்கும் அந்நாளில் இவர் பாடிய ஒரு பாட்டு அகச்சான்று தருகிறது.

சொல்லு ராமா! எனது நிலை என்ன?
நான் காசியை விட்டுக் கிளம்பினது
அறிவீனம் என்கிறார்களே!
என் வாழ்நாள் முழுவதும் காசியில் கழிந்தது.
இறக்குமுன் எழுந்து மக்ஹர் வந்திருக்கிறேன்
பல ஆண்டுகளாகக் காசியில் தவம் புரிந்தேன்
மக்ஹரில் இறக்க வந்திருக்கிறேன்
காசியும் மக்ஹரும் எனக்கு ஒன்றே
கல்நெஞ்சன் காசியில் இறந்தாலும்
கைலாசம் சேர்மாட்டான்!
ஹரிபக்தன் மக்ஹரில் இறந்தாலும்
அவனது குலமும் கடைத்தேறும்
கபீர் காசியில் இறந்தால் கடவுளுக்குப்பெருமை ஏது?
உள்ளத்தில் ஆண்டவனிருந்தால்,
காசியும் மக்ஹரும் ஒன்றே!

கபீர்தாசரின் இறுதிக்காலம் நெருங்கி விட்டது என்பதை அறிந்த இந்து-முஸ்லிம் சீடர்கள் ஆயிரக்கணக்கில் மக்ஹரில் வந்து கூடிவிட்டார்கள். இவர்களில் இந்துக்களும் உண்டு. முஸ்லிம்களும் உண்டு. குருவின் மீதுள்ள அன்பின் மிகுதியால் இவர் உடம்பைப் புதைப்பதா அல்லது எரிப்பதா? என்று ஒரு போராட்டமே சீடர்களுக்குள் ஏற்பட்டுவிட்டது என்பதையும், இது சம்பந்தமாக ஓர் அற்புதமே நிகழ்ந்துவிட்டது என்று கூறப்படுவதையும்நாம் ஏற்கெனவே,அறிந்திருக்கிறோம். இங்கே நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டியது, இவர் சீடர்களுக்குள்ளும் சச்சரவு ஏற்பட்டதே என்பதைத்தான்.

ஒரு குடும்பமாக வாழவேண்டிய சீடர் குழாமும் முஸ்லிம்—இந்து என்ற வேற்றுமையைப் பாராட்டியது என்றால் கபீர்தாசரின் நேரடியான தொடர்பும், உபதேசங்களும்கூட விரைவில் பயனளித்து விடவில்லை என்றுதான் கருத வேண்டியிருக்கிறது. தாயுமானவர் உபதேசங்களின் நிலையும் இப்படித்தானே. ஆனால், இந்த இருவர் கொள்கைகளையும் சோதித்துப் பார்த்து விட்டோமே என்று ஒருவரும் அவநம்பிக்கை கொள்ள வேண்டாம். சத்திய சோதனை போல் சமய சோதனையும் நீள நினைந்து செய்து கொண்டே போக வேண்டிய காரியம்தான்.

# 5. கபீரின் கவிதைகளும், கொள்கைகளும்

'எனக்கு எழுதத் தெரியாது' என்றும் 'நான் காகிதமோ எழுதுகோலோ தொட்டதில்லை' என்றும் கபீர்தாசரே தம் பாடல் ஒன்றில் தெரிவிக்கிறார். 'தர்க்கமும் எனக்குப் புரிவதில்லை' என்கிறார். ஏழைக் கைக்கோளன் தன் நெசவுத் தொழிலைத் தவிர வேறு கல்வி தன் பிள்ளைக்குக் கற்றுக் கொடுப்பது அக்காலத்தில் சாத்தியமில்லை. ஆனால், ஏட்டுப் படிப்புத்தான் படிப்பா?

இயற்கையையும் மனித வாழ்க்கையையும் கண்ணாரக்கண்டும் காதாரக் கேட்டும், நன்றாகக் கற்றிருக்கிறார் கபீர். உலகமே இவருக்கு ஒரு நூலகம். உதய சூரியனும் அஸ்தமன சூரியனும், பூமியும்வானவெளியும், கானமும் மலையும் ஆறு குளங்களும், பறவை விலங்குகளும் சிறிதும் பெரிதுமான இலக்கியங்களைப் போல் இவரை அறிவூட்டி வளர்த்திருக்கவேண்டும். இவற்றையெல்லாம் ஒரு திறந்த புத்தகம் எடுத்துக் கூறுவதுபோல், இவர் கவிதைகள் நமக்குக் கூறுகின்றன.

ஓதாது உணர்ந்த உயர் ஞானிகள் கற்றுக்கொள்ளக் கூடியதை எல்லாம் கபீர்தாசர் வாழ்க்கைப் பள்ளியில் கற்றுக் கொண்டார். மூச்சுவிடுவதுபோல் அவ்வளவு இயற்கையாக இவர் கல்வி கற்ற வண்ணமாயிருந்தார். இந்த இயற்கைக் கல்விக்கு இவர் ஆயுள் மாணாக்கர்! ஓதாமலே உணர்விக்கும் இக் கல்வியை நிறைவு செய்தது குருமூர்த்தியின் உபதேசம்.

இவரது கவிகளில் ஸாகிகள் என்பவை வடிவில் குறுகிப் பொருளில் நிமிர்ந்திருப்பவை. இவை தாயுமானவரின் கண்ணிகளை வடிவிலும் ஒத்திருக்கின்றனஎனலாம். எழுதப்படிக்கத் தெரியாத குடியானவர்களும் வடநாட்டிலே கபீரின் கவிதைகளைப் பழமொழிகளைப் போலவும், வசீகரமான கண்ணிகளைப் போலவும், ஔவை பாடல்களைப் போலவும் தெரிந்து கொண்டு இன்புறுகிறார்கள்.

கபீரின் வேறுவகைப் பாடல்களைப் 'பதங்கள்' என்கிறார்கள். இப்பதங்கள் நாலு அடிகள் முதல் நூறு அடி வரை நீண்டு செல்லும். இவை இன்னிசையோடு பாடுவதற்கென்றே அமைந்தவை. 'ஸாகி' யில் சித்திரம் போல் சுருக்கிக் கூறப்படுவன, பதங்களில் விளக்கம் பெறுகின்றன. 'பத'த்திலே உபமானம், உருவகம் முதலிய சிறப்புக்கள் உண்டு. பதங்களில் பெரும்பாலும் "ஸாகி' கள் பலவற்றிலும் கபீர் என்ற முத்திரை காணப்படுகிறது.

கபீர் கதைகளில் செருகு கதைகள் இருப்பதுபோல், கபீர் கவிகளிலும் செருகு கவிகள் உண்டு. இச்செருகு கவிகளும் 'கபீர் முத்திரை' தாங்கி வரும். ஆனால், இந்தக் கள்ளக்கடைச் சரக்குகளை எளிதாக இனம் கண்டுகொள்ளலாம். ஆதிகிரந்தம் என்னும் சீக்கியரின் முக்கியமான சமய நூலில் கபீரின் கவிகளும் முக்கிய இடம் பெற்றுள்ளன. ஆதிகிரந்தம் 1590-இல் தொகுக்கப் பெற்றதாகத் தெரிகிறது.

'பீஜக்' என்ற தொகை நூலும் உண்டு. இதில் உள்ள பாடல்கள் கபீராலும் இவரது சீடரான பகவான் தாசராலும் தொகுக்கப் பெற்றிருப்பதாய்ச் சொல்லுகிறார்கள். 'ஆதிகிரந்த'த்திலும், 'பீஜக்' என்ற தொகை நூலிலும் உள்ள பாடல்களில் செருகு கவிகள் இல்லை என்றே சொல்லலாம். இன்னும் கபீர் பெயராலும் இவர் சீடர்களின் பெயராலும் வழங்கும் நூல்கள் பல உண்டு என்பர்.

கபீர் அவ்வப்பொழுது பாடிய பாடல்களை அருகே இருந்த சீடர்கள் எழுதிக்கொண்டார்கள். அல்லது மனப்பாடம் செய்து கொண்டார்கள். இப்படிப் பல ஆண்டுகள் கழிந்த பின்புதான் தொகை நூல்கள் தோன்றியுள்ளன. அதற்குள் சிதைவுகளோ, பாட பேதங்களோ ஏற்பட்டிருக்கவும் கூடும். இதனால் தாயுமானவர் பாடல்களை வரையறுத்து அவர் பாடியவை என்று கூறுவதுபோல் கபீர்தாசர் பாடல்களைக் குறித்துச் சொல்ல முடியாது.

தாயுமானவர் 'ஆதி இன்னதென்று ஓதுதற்கு அரிய' தமிழைக் காலத்திற்கு இசைந்த ஒரு புதிய வண்ணம் ஏற்றி வளர்த்தார். கபீர்தாசரோ தம் காலம் வரையில் பண்பட்டு, வளர்ந்திராத இந்தியை வளர்த்துப் பாஷை மாதர்களின் குழுவில் நாணிக் கோணி முடங்கிக் கிடக்காமல் நிமிர்ந்திருக்கச் செய்தார். கபீர்தாசர்காலத்திலே இந்தி பல பிரதேச மொழிகளாகப் பிளவு பட்டிருந்தது. காசியிலும் அதற்குக் கிழக்கிலும் வழங்கிய இந்தி மொழியைக் கற்றுத்தான் இராமானந்தர் தம் பிரசார இயக்கத்தை நடத்திவந்தார். அதே பிரதேச மொழியில்தான் கபீர் பாடியிருக்கிறார்.

இப்பிரதேச மொழி கபீராலும், இவருக்குப் பின் துளசிதாசராலும் கையாளப்பட்டு அந்த இருவகைச் சிறப்புக்களால் செழுமையாக வளர்ந்து வந்திருக்கிறது. இந்த மொழியில் பிறமொழிக் கலப்பு அதிகம் என்று சொல்லத் தேவை இல்லை. கபீர்தாசர் காலத்தில் முகம்மதியர்களின் பாரசீக மொழியும், அராபிய மொழியும், ஆப்கன் துருக்கி மொழிகளும் இந்திக்கு உரம் தந்திருக்கின்றன. கபீர்தாசர் அத்தகைய கலப்பு மொழியில் சாதாரண மக்களது நாவிலே வழங்கும் பழகும் வழக்குச் சொற்களுக்குத் தனிச் சலுகை காட்டி, அவற்றின் உதவியால் தம் வாழ்க்கைக்கு ஒரு தனி உறுதியும் எளிமையும் தேடிக் கொண்டிருக்கிறார்.

இயற்கையில் நாம் பன்மையில் ஒருமையைக் காண்கிறோம். வேற்றுமையில் ஒற்றுமையை காண்கிறோம். இரண்டு மரங்கள் ஒத்திருப்பதில்லை; இரண்டு இலைகள்கூட ஒத்திருப்பதில்லை. ஒருவனது கைரேகைகள் போல் வேறொருவன் கைரேகை இருப்பதில்லை. முகங்கள் ஒத்திருப்பன அல்ல. அகங்களும் அப்படியே. இவ்வளவு விசித்திரமாக நெசவு செய்யப் பெற்றிருக்கும் இந்த இயற்கையிலும் ஒற்றுமை உண்டு; ஒருமையும் உண்டு. மானுடப் பண்பு என்ற ஒருமை மக்களை ஒன்று படச்செய்கிறது. இப்படியே கவிதை உலகமும்,ஒவ்வொரு உண்மைக் கவிக்கும் தனி நடை உண்டு. கபீர்தாசரின் கவிதைகளிலும் தனிச் சிறப்புடன் கபீர் நடைபோடு வதைக் காண்கிறோம்.

தனிச் சிறப்பு வாய்ந்த இவர் கற்பனைகளுக்கும், கவிதையின் ஜீவ வேகத்திற்கும் பல கவிதைகளை உதாரணமாகக் காட்டலாம். ஏற்கெனவே சில கவிதைகளைப் பார்த்திருக்கிறோம். இன்னும்,

கடைவீதியில் இரத்தினம் கிடந்தது,
புழுதி படிந்திருந்தது,
பலர் பார்த்துக்கொண்டே போய்விட்டார்கள்.
இரத்தின பரீட்சை தெரிந்தவன்
எடுத்து வைத்துக் கொண்டான்;

என்ற பாடற்பகுதியை பாருங்கள்.

இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். கபீர் முத்திரை வெளிப்படுவதற்கு முன்பே, பாட்டை முற்றும் ஓதி உணர்வதற்கு முன்பே, கபீரின் அதிகார முத்திரை தரித்துவரும் வாக்கு இது என்றுசொல்லிவிடத் தோன்று கிறது, கபீர் வாக்குடன் சொற்பப் பழக்கம் உள்ளவர் களுக்கும்.

கபீரின் நீண்ட பாடல்களை நறுமணங் கமழும் பனிநீர் என்றால் 'ஸாகிகளை' அத்தராகக் கண்டு கொள்ளலாம்.

இனியசொல் மருந்து; கடுஞ்சொல் அம்பு;
காதில் புகுந்து உடல் முழுதும் தொளைத்துவிடு

கிறது என்ற 'ஸாகி' யைத்தான் பாருங்கள்.

சிறியோர் பிழை பொறுத்தல் பெரியோர் கடன்;

பிருகு உதைத்தால் பெருமாளுக்கு என்ன குறைவு

என்ற ஸாகியிலும் இத்தகைய சூத்திரக் கவிதையின் தனிச்சிறப்பைக் கண்டு கொள்ளலாம்.

இந்துக்களது இதிகாச புராணக் கதைகளையும் கபீர் பயன்படுத்திக் கொள்கிறார் என்பதற்கு வேறோர் உதாரணமும் காண்போம்.

கெட்டவனைத் தேடிப்போனேன், ஒருவனாவது
கிட்டவில்லை
உள்ளுக்குள் நோக்கினேன். எனினும்
கெட்டவன் இல்லை என்று உணர்ந்தேன்.

இது மகாபாரதத்தில் தருமன் கூற்றை நினைப்பூட்டு கிறதல்லவா?

## கொள்கைச் சிறப்பு

இவ்வளவு தனிச்சிறப்புகள் வாய்ந்த கபீர் ஒரு தனிச் சமயம் அமைக்க முற்படவில்லை. 'கபீர்பந்த்' என்ற மரபை அமைத்துக் கொண்டவர்கள் சீடர்களே. இந்த அம்சத்தில் இவர் திரு மூலரை நினைவூட்டுகிறார். திரு மூலரும் ஒரு மரபை அமைத்துக் கொள்ளவில்லை; மூலன் மரபு என்பது சீடர்கள் அமைத்துக்கொண்டதே.

பொதுவாகக் கபீரின் கொள்கைகள் இவரது பக்தி அனுபவத்திற்கு—இவரது சொந்த அநுபூதிக் கலைக்கு— அறிகுறிகள்; பழுத்த உலகியல் அறிவிலும் அனுபவத் திலும் தோய்ந்து, கபீரது சொற்கலையில் உருப் பெற் றவை. அடுத்தபடியாக, குருவின் உபதேசங்களும், இவர் உள்ளத்தில் வேரூன்றி வளர்ந்து இவரது வாழ்க்

கையோடு வாழ்க்கையாகக் கலந்திருக்க வேண்டும். இதனால் தான் கபீரின் கவிகளிலே ஆண்டவனைக் குறிக்கும் பல பெயர்களில் இராம நாமம் அதிக அளவில் வழங்கப்படுவதைக் காண்கிறோம்; ஹரி, விஷ்ணு முதலிய பெயர்கள் கடவுளைக் குறிப்பதைக் காண்கிறோம்.

ஆனால் கபீரின் இராமன் அவதார மூர்த்தியான இ ர ா ம ன் அல்லன். இராமானந்தரின் இராமன் அவதார மூர்த்திதான், சக்கரவர்த்தித் திருமகன்தான். ஆனால் கபீர் அவதாரக் கொள்கையை ஏற்றுக் கொள்ளாதவர். இதில் இவர் குருவோடும் கருத்து மாறுபாடு கொண்டிருப்பவர். ஆண்டவனை அல்லா என்றும் ஹரி என்றும் கிருஷ்ணன் என்றும், சத்தியலோக வாசி என்றும் அழைப்பது போல இராமன் என்றும் அழைக்கிறார். ஆனால் அடிக்கடி இராமன் என்ற பெயராலேயே அழைப்பதற்குக் காரணம் அவதார மூர்த்தியான இராமன் மீது உள்ள பக்தி அல்ல குருபக்தி தான்.

இராமாநுஜரது விசிஷ்டாத்வைதக் கொள்கை இராமானந்தர் வாயிலாக இவர் அறிந்து கொண்டதே. எனினும் ஆண்டவனோடு இரண்டறக் கலத்தல் என்னும் இவர் கொள்கையும் பொதுவாக சூபிகளின் இக்குறிக்கோளும் சங்கரரின் அத்வைதத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டுள்ளன. சக்தி சிவன் முதலான பெயர்களையும் இவர் ஆண்டவனுக்கு உபயோகிப்பதும், சங்கரரின் சமரச வேதாந்தத்தையும் நினைப்பூட்டுவதுதான்.

வாழ்க்கையின் குறிக்கோள் என்பதில் சங்கரரின் அத்வைதத்தையும் சூபிகளின் தத்துவத்தையும் ஏற்றுக் கொள்ளும் கபீர், சங்கரரின் **மாயை** என்ற கொள்கையையும் ஒருவாறு ஒப்புக் கொள்கிறார். இம்மாயாவாதக் கொள்கையைக் கேவலம் வரட்டு வேதாந்தம் ஆக்கி

விடாமல் கவிச்சுவை ததும்ப மாயையை ஒரு மாயா மோகினி ஆக்கிவிடுகிறார். இந்த மோகினி இல்லாததை உள்ளதுபோல் காட்டும் பெரிய மோசக்காரி என்கிறார்.

ஆழ்வார்களைப் போலவும் மீராபாய், ஜயதேவர், சைதன்யர் ஆகியோர்களைப் போலவும் காதலைத் தெய்வ நிலைக்கு உயர்த்தி ஆண்டவனை நாயக நாயகி பாவத்தில் வழிபடுவதும் இவர் உள்ளம் உகந்த வழிதான்.

கனவில் கடவுளைக் கண்டேன்.
ஏனோ விழித்து விட்டேன்,
மீண்டும் கனவை வேண்டிக்
கண்திறவாது இருக்கிறேன்.

என்று இவர் கூறுவதைக் கேளுங்கள்.

'உறங்கினால் கனவிலும் துயிலுணர்ந்தால் உள்ளத்திலும் சந்திக்கிறேன்' என்றும், அல்லும் பகலும் ஹரியை விட்டுப் பிரிவதே இல்லை என்றும், இவர் கூறுவதையும் கேளுங்கள். சூபிகளைப்போல் கபீரும் மந்திர ஜபத்தின் மகிமையை வலியுறுத்துகிறார். இதுவும் ஓரளவு பக்தி மார்க்கத்திற்குப் பொருந்துவதே. இத்தகைய கொள்கைகள் ஞான பக்தர்களுக்குப்பொதுவானவை அன்றி, இவற்றில் புதுமை ஒன்றும் இல்லையே என்று சொல்லலாம். இக்கொள்கைகளைத் தம் சொந்த அனுபவங்களுடன் கவிதானுபவத்துடனும் இரண்டறக் கலந்து வெளியிடுவது கபீரின் தனிச் சிறப்பியல்பு.

யோகத்தையும் கபீர் ஒரு சாதனமாகக் கொள்கிறார். சூபிகளும் இப்படித்தான். ஆனால் யோக சித்திகள் வாழ்க்கையின் குறிக்கோளுக்கு இடையூறாகக் கூடும் என்பதும் பக்தர்களின் கொள்கை தான். அத்தகைய சித்திகளைப் பிரமாதப்படுத்துகிறார்களே அவர்களைக் கபீர்மிகவும் வன்மையாகக் கண்டிக்கிறார்.

சமயவெறி கபீரின் கண்டனச் சொல் அம்புகளுக்கு ஒரு விசேஷ இலக்காகும். மதவெறிகளையும், சாதி வெறிகளையும் கபீர் அறவே வெறுத்தவர். 'அரியும் அரனும் ஒன்று' என்பர் சைவ வைஷ்ணவ சமரச வாதிகள். கபீரோ அரியும் அல்லாவும் ஒன்று' என்கிறார். இக்காலத்தில் அப்படிச் சொல்வது எளிது. ஆனால் அக்காலத்திலோ?

கபீருடைய அதி முக்கியமான கொள்கை எங்கும் நிறைந்த கடவுள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் கோயில் கொண்டிருக்கிறான் என்பதே என்று கபீர்தாசரின் ரசிக அன்பர்கள் கூறுவதுண்டு. இதுவும் பக்த மதத்தின் ஒரு பெருங்கொள்கைதான். ஆனால் இக்கடவுளை வெளியே கல்லிலும் நீரிலும் (தீர்த்தத்திலும்) தேடுவது மடமை என்கிறார் கபீர். எங்கும் உள்ள கடவுள் கல்லிலும் தீர்த்தத்திலும் இருக்க முடியாதா?—என்பது சைவ வைஷ்ணவ பக்தர்களின் சாதாரண மனநிலை.

கல்லிலும் செம்பிலும் மரத்திலும்கூடக் கடவுளைப் பார்க்க முடியாதவன் மனிதனிடத்தில்தான் எப்படி பார்க்கப் போகிறான் என்றார், எமர்சன் என்ற பேரறிஞர் ஒரு சமயம். மனிதனிடத்தில் நற்குணங்களைப் போல் தீக்குணங்களும் உண்டு. நமக்குச் சிலரிடத்தில் அன்பும் நம்மை அறியாமலே சிலரிடத்தில் அருவெறுப்பும் ஏற்படுவதையும் பார்க்கிறோம். இத்தகைய நிலைமை கல்லில் உள்ள மூர்த்தியை நோக்கும்போது ஏற்பட அவசியமில்லையே. இதைத் தான் கபீர்—சித்தாந்தத்தில் உள்ள ஒரு குறை என்று சுட்டிக் காட்டவில்லை. கபீர்தான் சித்தாந்தம் ஒன்றும் ஏற்படுத்தவில்லையே;

கபீரின் கொள்கைச் சிறப்பு கவிதைச் சிறப்போடு கலந்தே வெளிப்படுகிறது, கபீரின் கொள்கைகளைக் கொள்கைகள் என்று சுட்டிக் காட்டுவதைவிடக் கபீரின் அநுபூதியும் பக்தி அனுபவமும்

என்று குறிப்பிடுவதே சிறந்தது என்று கருதுகிறேன். கவிதையைக் கொள்கலமாகக் கொண்டு இக்கருத்துக்கள் வெளிப்படுவதால் பலர் இவற்றைக் கொள்கைகள் என்று குறிப்பிடுகிறார்கள் போலும்.

கபீர்தாசர் சங்கரரைப்போல் இராமானுஜரைப் போலசித்தாந்தம் செய்யாவிட்டாலும், இவர் காலமான சிறிது காலத்திற்குள்ளேயே இவர் பெயரால் ஒரு தனிச் சித்தாந்தம் தோன்றிவிட்டது. காசி முதலிய சில இடங்களில் கபீர் மடங்களும், மடாதிபதிகளும் ஏற்பட்டன. தெள்ளத் தெளிந்த எளிமையான இவர் வாக்கிற்கு வியாக்கியானங்களும் தோன்றிவிட்டன. இவர் கருத்துக்களை விளக்கம் தந்து வளர்க்கும் முறையில் புதிய நூல்களும் ஏற்பட்டுள்ளன; ஏன் தத்துவ நூல்களும் தோன்றியுள்ளன.

இராமானந்தருடன் கபீர் வாக்குவாதம் நடத்தியதாக ஒரு தத்துவநூல் வெளிவந்திருக்கிறது. கபீரைப் பற்றிய தோத்திர நூல்களும் வெளி வந்துள்ளன. கபீர் சமயத்தின் தத்துவங்களின் தொகுதியாக 'ரமைனீ' என்ற நூல் மதிக்கப்படுகிறது. 'சப்தாவெளி' என்ற நூலில் இவருடைய ஆயிரம் உபதேசங்கள் காணப்படுகின்றன. நூறு சிறு கவிகளில் இவருக்கு மங்களம் பாடுகிறது ஒரு நூல். வசந்த ராகத்தில் இவரைப் பற்றிய கீதங்களின் தொகுதி வசந்தம் என்றே சிறப்புப் பெயர் பெற்றிருக்கிறது.

சடங்குகளையும், விரதங்களையும் எதிர்த்துக் கண்டித்த கபீரை முன்னிட்டுப் புதிய சடங்குகளும், விரதங்களும் தோன்றியுள்ளன. காசியாத்திரை வேண்டாமென்றும் துவாரகை யாத்திரை கூடாது என்றும் தீர்த்த யாத்திரைகளை நிந்தனை செய்திருக்கும் பகுத்தறிவுவாதிக்குச் சமாதி அமைத்து அச்சமாதிக்குச் சீடர்கள் புனித யாத்திரை செய்வதையும் கண்ணாரக் காண்கிறோம்.

இவர்களில் இந்துக்களும் உண்டு, முஸ்லிம்களும் உண்டு. இழிந்த மரபினர் என்று கருதப்படுவோர் இத்திருக் கூட்டத்தில் அதிகமாக இடம் பெற்றுள்ளனர். துறவு வேண்டியதில்லை என்று கபீர் கூறியிருக்க இக்கூட்டத்தில் துறவிகளும் இடம் பெற்றுள்ளனர். சுமார் 25 வருடங்களுக்குமுன் இந்த கபீர்-சமயத்தைச் சேர்ந்தவர்களின் தொகை சுமார் 25 லட்சம் என்று கணக்கிடப் பட்டிருக்கிறது.

ஃ ஃ ஃ

கபீர்தாசரின் பாடல்களில் பொறுக்குமணிகளான நூறு பாடல்களைக் கவிரவீந்திரநாதர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். இப் புத்தகம், எவலின் அண்டர்ஹில் என்பவரின் ஆராய்ச்சி முன்னுரையோடு லண்டனிலும், இந்தியாவிலும் 1945ல் வெளியிடப் பட்டது. இந்த முன்னுரையில் கபீர் அகில உலக அனுபூதிக் கலைஞர்கள் என்ற ஒரு சிறு கூட்டத்தில் முக்கியமான ஒருவர் என்று குறிக்கப்பட்டுள்ளார்.

அக்குழாத்தில் ஜலாலுதின் ரூமி என்ற ஸூபி கவிஞருக்கும் ஓரிடம் கொடுத்திருக்கிறார். செண்ட் அகஸ்தின், ரூயிஸ் பிர்க் (Ruys broeck) ஆகிய கிறிஸ்தவ அநுபூதிக் கலைஞர்களும் இடம் பெற்றிருக்கின்றனர். வேறு இந்திய அநுபூதிக் கவிஞருக்கோ, தாயுமானவர் போன்ற தமிழ் அநுபூதிமான்களுக்கோ இங்கு இடம் கிடைக்க வில்லை.

கபீருக்கு இக்குழுவில் இடம் கிடைத்ததற்குக் காரணம் கவி ரவீந்திரர், தமது ஆங்கில மொழி பெயர்ப்பின் வாயிலாகக் கபீரையும், அவரது கவிதைகளையும் உலகறியச் செய்திருப்பதுதான். தமிழர்களிடையே அநுபூதிக் கலைஞர்கள் வாழ்ந்திருக்கிறார்கள்; ஆனால் இன்றளவும் அவர்களை அறிமுகப்படுத்த ஒரு ரவீந்திரர் தோன்றவில்லையே.

# 9. அநுபூதிக் கலைஞர் இருவர்

ஆத்மா பரமாத்மாவை அனுபவித்து அறிவதை அநுபூதிக்கலை என்பர். கடவுள் உண்டா, இல்லையா? ஆத்திகமா? நாத்திகமா? சூனியமா, ஐயப்பாடா? இத்தகைய கேள்விகள் எல்லாம் கடவுளுண்மையைப் பகுத்தறிவு கொண்டு சோதிப்பவர்களுக்குத்தான், அனுபவித்துக் காண்பதை அறிவை அடிப்படையாகக் கொண்ட வாதங்களால் மறுக்கவும் முடியாது; மெய்ப்பிக்கவும் முடியாது. இந்த நிலையில் தாயுமானவரும் கபீர்தாசரும் அறிஞர்கள் மட்டுமில்லை, கடவுளைக் கண்டவர்கள்.

அநுபூதி அறிவைச் சுத்த அறிவு என்றும் கூறலாம். கண்ணால் காண்பதும் உண்மை அல்ல. காதால் கேட்பதும் உண்மை அல்ல, சுத்த அறிவால், தூய அருளால் காண்பதே உண்மை; இந்த உண்மையே கடவுள். இந்த அநுபூதி ஆற்றல் எல்லாருக்கும் உள்ளதுதான். ஆனால் தாயுமானவர், கபீர்தாசர், போன்ற சிலரே இதைப் பயன்படுத்திக்கொண்டு மக்களுக்கு வழிகாட்டிகளாகத் திகழுகிறார்கள்.

ஒரு மலையைப் பல ஓவியர்களும் பல கோணங்களிலிருந்து பார்த்துச் சித்தரிக்கக் கூடும். அந்தச் சித்திரங்கள் ஸ்தூலமாய் வேறுபாடுகளோடு காணப்படுவதையும் அறிவோம். ஆனால் ஒரே மலையை அவை சித்தரிப்பதால், ஒன்று போலவும் அவை காணப்படுகின்றன. இப்படியே பல நாட்டு அநுபூதிமான்களின் அனுபவங்களும் இருக்கின்றன. அதனால்தான் நம் தமிழ்நாட்டுத் தாயுமானவரை வடநாட்டுக் கபீர்தாசருடன் ஒப்பிட்டுப் பார்க்க முடிகிறது. பிறநாட்டு அநுபூதிக் கலைஞர்களுடனும், நாம் தாயுமானவரை ஒப்பிட்டு அநுபூதிக் கலையின் அடிப்படைத் தத்துவங்களை அறிந்து கொள்ளலாம்.

இந்து மதத்தில் உள்ளதுபோல் அநுபூதிக்கலை இஸ்லாம் மார்க்கத்திலும் ஸூபிக் கொள்கை என்ற

பெயருடன் காணப்படுகிறது. காதலர்களின் வாசகங் களைப் பரிபாஷையாக ஸூபிக் கலைஞர்களும் உபயோ கித்துக் கொள்ளுகிறார்கள்.

தாயிலானைத் தழுவும்
என் ஆவியே

என்ற அப்பர் வாக்கில் வருவது போன்ற தழுவுதல் முதலான குறியீடுகளை ஸூபிக் கொள்கையினரும் பயன் படுத்திக் கொள்வதைக் காண்கிறோம். இக்கொள்கை யின் உச்ச நிலையை ஜலாலுதின் ரூமி அத்தர் ஆகியவர் களிடம் காண்கிறோம். இக்கொள்கை வளர நமது நாட்டுப் பக்தி மதம் போல் இஸ்லாமும் உதவியிருப்பது கொண்டு, நமது பக்தி நெறிக்கும் ஸூபி நிலைக்கும் உள்ள தொடர்பை மேலும் ஆராய்ந்து பார்க்க வேண்டி யது அவசியமாகும்.

கிறிஸ்துவத்திலும் அநுபூதிக்கலையைக் காண் கிறோம். கிருஸ்தவர்களின் வேத நூலில் பழைய ஆகமத் தில் கீதங்கள் என்னும் பகுதியில் ஆத்மா ஆண்டவனைக் காதலிப்பதாக வருணிக்கப்பட்டுள்ளது. கிறிஸ்தவ அநு பூதிக் கலைஞர் பலரையும் அவர்களது பக்தி அனுபவங் களையும் குறித்து நூல்கள் எழுதப் பெற்றுள்ளன. கிறிஸ்தவ அநுபூதிகலைஞர்களில், ஜெர்மானியர் உண்டு; ஸ்பானிஷ் அநுபூதி மான்கள் உண்டு; லத்தீன் அநுபூதி மான்களும் உண்டு. அசிசியைச் சேர்ந்த பிரான்சிஸ் என்பவரைப் பற்றிப் பலரும் அறிவார்கள். கி.பி. 1491-1556 வரை வாழ்ந்த தெரிசா அம்மையார் ஆண்டா ளைப்போல் இறைவனை மணமகனாகப் பாவித்துக் காதலித்தாள்.

சீனாவிலும் அநுபூதிக்கலை ஒரு காலத்தில் பிரசித்த மாக இருந்தது என்ற செய்தி புதிய சீனாவின் போக்கை அறிந்திருப்பவர்களுக்கு அதிசயமாகவே இருக்கும். கிரீஸ் தேசத்தில் வாழ்ந்த பிளேட்டோவை ஐரோப்பிய தத்துவ அனுபவக்கலையின் பரமபிதா எனக் கூறுவ துண்டு. இவர் கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே வாழ்ந் தவர். இக்கலையை நன்கு விளக்கிய பிளாட்டினஸ் என்ற கிரேக்க ஞானி நமது சங்க காலத்தை

ஒட்டி வாழ்ந்தவர். எனவே, அநுபூதிக்கலை கிழக்கே இருந்து மேற்கே சென்றதா, மேற்கேயிருந்து கிழக்கே வந்ததா? என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. வேத காலப் பிற்பகுதியில் இங்கே இருந்துதான் யவன நாடுகளுக்கு அநுபூதிக்கலை போயிருக்க வேண்டும் என்று ஊகிப்பாரும் உண்டு.

## தென்னகத்திலும் வடநாட்டிலும்

'ஸூபிக் கொள்கையானது வைணவத்தை ஒத்ததாகும்' என்ற கலைக்களஞ்சிய குறிப்பு (தொகுதி 1 பக்கம் 279) கூர்ந்து நோக்கத் தக்கது. இதை முழு உண்மையாகக் கொள்ள முடியாது. நமது சைவத்திலும் அநுபூதிக் கலைக்கு இடமுண்டு.

தெள்ளத் தேறித்
தெளிந்து தித்திக்கும்ஓர்
உள்ளத் தேறல்
அமுத ஒளிவெளி
கள்ளத் தேன்கடியேன்,
கவலைக் கடல்
வெள்ளத் தேனுக்கு
எவ்வாறு விளைந்ததே.

என்ற அப்பர் சுவாமிகளின் அருள் வாக்கிலே அநுபூதிக் கலையின் இலக்கணத்தையே ஒருவாறு காண முடிகிறதல்லவா? ஆனால் வைணவத்தில்தான் அநுபூதி நிலை தனக்குரிய முழுமையான இலக்கணத்தையும் பெறலாயிற்று என்பது உண்மை.

இராமானந்தர் இராமாநுஜரின் வைணவ பக்தி நெறியை இந்துஸ்தானத்தில் பரப்பினார் அல்லவா? அவருடைய சிறந்த சீட ரத்தினம் தானே கபீர்தாசர். ராஜபுதன இளவரசி மீராவும் 'வடநாட்டு ஆண்டாள்' என்று சொல்லத் தக்கவள்தானே. துளசிதாசரது இராமாயணத்திலும் தென்னகச் சாயை பெரிதும் படிந்து கிடப்பதைக் காண்கிறோம். வங்கநாட்டு சைதன்யரும் தெற்கே இராமேசுவரம் வரை வந்து போனவர். இவர்

கள் எல்லாம் தோற்றுவித்த அநுபூதி என்னும் கற்பகத்தில் மலர்ச்சி பெற்றவர்கள் இராமகிருஷ்ணரும் விவேகாநந்தரும், அவர்களுக்குப் பின் அரவிந்தயோகியும் ஆவார்.

இவற்றையெல்லாம் கருத்தூன்றிக் கவனிக்கும்போது தென்னகத்திலிருந்தே அநுபூதிக் கலை வடக்கே யாத்திரை செய்தது எனக் கருதுவது மிகையாகாது. இக் கலை சிறப்பாக இராமானந்தர் வாயிலாக வடக்கே சென்ற போதிலும் திருமூலயோகி என்ற அநுபூதிக் கலைஞரின் ஞான மரபில் தோன்றிய தாயுமானவரின் அநுபூதிக் கருத்துக்களும் வட நாட்டில் யாத்திரிகர் மூலமாகப் பரவியிருக்கக் கூடாதா? இப்படி ஒரு வினா எழக்கூடும்.

இதற்கு விடையாக, ஆம்; ஆனால் கபீர்தாசரைத் தாயுமானவரின் கருத்துக்கள் பாதித்திருக்க முடியாது என்பது நிச்சயம். கபீர்தாசர் காலத்தால் முற்பட்டவராதலின், கபீர்தாசரின் கொள்கை தாயுமானவரை வசீகரித்திருக்கக்கூடும்; ஆனால்இதை நிச்சயமாகச்சொல்வதற்கில்லை. தமிழகத்திலே ஒரு கிளையில் நெருங்கிப் பூத்த இருமலர்களை ஒத்துக் காணும் வைணவத்திலும் சைவத்திலும் உள்ளடங்கிக்கிடக்கும் அநுபூதிச் செல்வமே தாயுமானவருக்கும் உரிமைச் செல்வமாயிற்று என்று கருதுவதே பொருத்தமாகும்.

மகாராஷ்டிரத்திற்கும் தமிழகத்திற்கும் நெருங்கிய கலை உறவு உண்டு. அநுபூதிக் கலை உறவும் உண்டு. மகாராஷ்டிர அநுபூதிக் கலைஞர்களுக்கும் நமது நாட்டு அநுபூதிமான்களுக்கும் உள்ள தொடர்பையும்ஆராய்ந்து பார்க்க வேண்டியது அவசியமே. ஆனால் இப்போதுள்ள ஆராய்ச்சி நிலையில் நமது சைவக் கொள்கைகளும் கருத்துக்களும் எவ்வளவு தூரம் மகாராஷ்டிரர்களை வசீகரித்திருக்கின்றன என்று திட்டமாகச் சொல்ல முடியாது.

முடிவாக நாம் தெரிந்து கொள்ள வேண்டியது. கபீர்தாசரும் தாயுமானவரும் ஒருங்கே உலக அநுபூதிக் கலைஞர்களின் திருக்கூட்டத்தில் தக்க இடம் பெறத் தக்கவர்களேதான்.